# வம்புப் பேச்சு



கி. சாவித்திரி அம்மாள்

ராஜாஜியின் முன்னுரையுடன்

Approved by the Text Book Committee of Madras for Class use for Forms IV to VI. Vide Page 112 Fort St. George Gazette, dated 7-5-1952




கலைமகள் காரியாலயம்
மயிலாப்பூர் : : சென்னை-4



[ரு. 1




முதற் பதிப்பு: ஜூன், 1950
இரண்டாம் பதிப்பு, ஜூன், 1952.

# பொருளடக்கம்





PRINTED AT
THE MADRAS LAW JOURNAL PRESS,
MYLAPORE, MADRAS.

# முன்னுரை

சாவித்திரி அம்மாள் என்ன எழுதினாலும் அது நம்முடைய நாட்டுக்கு உரிய தருமத்திலும் பண்பாட்டிலும் தோய்ந்ததாக இருக்கும். பெரிய வீட்டில் பிறந்து நல்ல மேதாவியால் அன்போடு வளர்க்கப்பட்ட ஓர் அம்மையார் வேறு எப்படி எழுத முடியும்? குலம், படிப்பு, வாழ்க்கையில் நேர்ந்த சோதனைகள் எல்லாம் சேர்ந்து சாவித்திரி அம்மாளின் எழுத்துப் பணியை மேன்மைப்படுத்தியிருக்கின்றன.

சாவித்திரி அம்மாளின் எழுத்தில் எழுத்தாளர்களுக்கு வெகு சகஜமான அகங்காரம் என்கிற குற்றத்தைக் காண முடியாது. கருத்துக்கள் எல்லாம் வெறும் சித்திரத்துக்காக வரையப்படாமல் சந்தர்ப்பத் தொடர்பும் உண்மையும் பொருந்தி நன்றாக அலசி ஆராய்ந்து எழுதப்பட்டிருக்கும். படிக்கும்போதும் ஒரு கஷ்டமும் இல்லாமல் ஆற்றோட்ட நடையாக இருக்கும்.

இவ்வளவு நான் சொன்னேனாகிலும் இதை நான் சொல்ல வேண்டிய அவசியமே இல்லை. சாவித்திரி அம்மாளின் கட்டுரைத் தொகுதிக்கு ஒரு முகவுரையும் வேண்டியதே இல்லை. கேட்டதை மறுக்க இயலாதவனாக இதை எழுதினேன். அதில் எனக்குப் பெருமையும் உண்டு.

சென்னை,
14-4-1950

**சக்கரவர்த்தி ராஜகோபாலாசாரியார்**

# முகவுரை

"கட்டுரை எழுதுவது ராக ஆலாபனம் செய்வதைப் போன்றது. சில ஸ்வரங்களை வைத்துக் கொண்டு அவற்றில் சஞ்சாரம் செய்யும் மாதிரியில் பாடுபவரின் மனோதர்மமும் திறமையும் வெளியாகின்றன அல்லவா? அதைப் போல" என்று அறிஞரான நண்பர் ஒருவர் அடிக்கடி கூறுவார்.

அது எப்படியோ! ஒன்று மட்டும் நிச்சயமாகச் சொல்லலாம். கட்டுரைக்கு விஷயம் எதுவாக இருந்தாலும் சரி; எப்படி எழுதினாலும் சரி. உன்னதமான கருத்துக்களைப்பற்றித்தான் எழுத வேண்டும் என்ற நியதிகூட இல்லை. சிறு துரும்பைப்பற்றி வேண்டுமானாலும் சிறப்பாக எழுதிவிடலாம். ஆனால் கட்டுரை படிப்பதற்கு ரசமாக இருக்க வேண்டும் என்பதை மட்டும் யாரும் உடனே ஒப்புக்கொள்வார்கள். இப்புத்தகத்தில் வெளியாகியிருக்கும் கட்டுரைகளில் அந்த நோக்கம் எவ்வளவு தூரம் நிறைவேறியிருக்கிறது என்பதை நான் கூற முடியாது. அதை நிர்ணயிக்கும் உரிமை வாசகர்களையே சார்ந்தது.

தம் உடல் நிலை சரியில்லாததையும் பொருட்படுத்தாமல் என் வேண்டுகோளுக்கு இணங்கி, அன்போடு இந்தப் புத்தகத்துக்கு முன்னுரை எழுதி உதவிய ஸ்ரீ ராஜாஜி அவர்களுக்கு என் மனமார்ந்த நன்றி உரித்தாகும்.

இந்தக் கட்டுரைகள் பல பத்திரிகைகளில் வெளியானவை. இவற்றைத் தம் பத்திரிகைகளில் பிரசுரித்து உதவிய பத்திரிகாசிரியர்களுக்கும் அவற்றைத் தொகுத்து அன்புடன் அழகான புத்தக ரூபத்தில் வெளியிட்ட கலைமகள் காரியாலயத்தாருக்கும் என் மனமார்ந்த நன்றி உரித்தாகும்.

மயிலாப்பூர்,
15-4-1950

கி. சாவித்திரி அம்மாள்




# வம்புப் பேச்சு

## 1

என் சிநேகிதி ஒருத்தி லேடீஸ் கிளப் மெம்பர். என்னைப் பார்க்கும்போதெல்லாம் என்னையும் கிளப்பில் சேரும்படி தூண்டுகோல் போட்டு வந்தாள். அங்கே நீங்கள் எப்படிப் பொழுது போக்குகிறீர்கள் என்று அவளை ஒரு நாள் கேட்டேன்.

"ஏன், டென்னிஸ், பாட்மின்டன், பிரிட்ஜ் முதலிய விளையாட்டுக்கள் இருக்கின்றன. நமக்கு எது பிரியமோ அதில் சேர்ந்து விளையாடலாம். ஒன்றும் பிடிக்காவிட்டால் பிறர் விளையாடுவதைப் பார்த்துக்கொண்டாவது இருக்கலாம். உற்சாகமாயிருக்கும்" என்றாள் அவள்.

"நாலைந்து பேர்கள் சேர்ந்து விளையாட்டாகப் பேச மாட்டீர்களா?" என்று நான் கேட்டேன்.

"வெறும் வம்புப் பேச்சா? ஆட்டங்களில் சேர்ந்து விளையாடுபவர்களுக்கு அதற்குச் சாவகாசம் இல்லை. இருந்தாலும், 'அவர்கள் அப்படி, இவர்கள் இப்படி என்று என்ன வம்பு?' என்று நான் அதில் சேருவதே இல்லை" என்று அவள் பதில் சொன்னாள்.

வாஸ்தவந்தான்! நாலைந்து பேர்கள் சேர்ந்து பேசுவதென்றால் என்ன? ஒன்று தம்மைப்பற்றிப் பேசுவது அல்லது பிறரைப்பற்றி வம்பளப்பது. சிலருக்

குத் தம்மை விட்டால் வேறென்றுமே பேசத் தெரியாது. வேறு சிலருக்கோ பிறரைப்பற்றிப் பேசாவிட்டால் சம்பாஷணையே ருசிக்காது. அவ்வாறில்லாமல் அழகாகவும் ரசமாகவும் சம்பாஷணையைக் கொண்டுபோவது சிரமந்தானே என்று நினைத்துக்கொண்டேன்.

ஆனால் சாதாரணப் பேச்சில்கூடப் பெரியதாக நியமங்கள் ஏற்படுத்துவது அவசியமா என்று கேட்டால் என்ன பதில் சொல்லுவது? எல்லாப் பேச்சையும் நாம் வம்பு என்று சொல்லிவிட முடியுமா? அது பேசுகிறவர்களையும் கேட்பவர்களையும் பொறுத்ததல்லவா?

சம்பாஷணை ரசமாக இருக்க வேண்டுமென்றால் பேசுகிறவர்கள் நல்ல இயற்கை அறிவும் சிறந்த உணர்ச்சியும் பெற்றவர்களாக இருக்கவேண்டும். எந்த விஷயத்தையும் அளவு மீறிச் செல்லாமல் நிறுத்திக்கொள்ளத் தெரிந்தவர்களாக இருக்க வேண்டும்.

பிறரைப்பற்றியே பேசக்கூடாதென்று ஒரே அடியாக நிபந்தனை ஏற்படுத்திவிடுவதும் சரியல்ல. யார் எக்கேடு கெட்டால் நமக்கென்ன என்று இருப்பவர்களால்தான் அது சாத்தியம். அத்தகைய மனோபாவந்தான் சரியென்றால், பிறகு நாம் எதைப்பற்றித்தான் பேச முடியும்? பிறரைப்பற்றிப் பேசுவது மனித இயல்பே ஒழிய வேறல்ல.

நமக்குத் தெரிந்தவர்களைப்பற்றி அவர்கள் இல்லாதிருக்கும்போது பேசுவது தவறு என்று தர்மசாஸ்திரம் கூறுகிறோம். ஆனால் உலகில் எல்லோரும் எப்படிப் பேசவேண்டுமோ அப்படிப் பேசிக்கொண்டும், எப்படி நடக்கவேண்டுமோ அப்படி நடந்துகொண்டுமா இருக்கிறார்கள்? அவர்களைப்பற்றி ஒருவரும் வாய்திறவாமலே இருக்க முடியுமா? ஆயினும் ஒரு விஷயம் மட்டும் கவனிக்க வேண்டியது நலம். நாம் எல்லாவற்றையும் எல்லாரிடமும் சொல்லுவது கூடாது. சிலவற்றைச் சிலரி

டம் சொல்லாமல் இருப்பதுதான் நல்லது. ஏனெனில் கேட்பவர்களில் சிலர் ஓட்டைக் குடம்போல் இருப்பார்கள். அந்தரங்கமாகக் கூறியதாக இருந்தாலும் பேச்சுச் சுவாரஸ்யத்தில் மறந்துபோய் எல்லாவற்றையும் வெளியிட்டுவிடுவார்கள். "தாம்பும் அறுதல்; தோண்டியும் பொத்தல்" என்ற நிலைமையில் பிறகு யாரைக் குற்றம் கூறுவது?

சிலருடைய சுபாவத்தை அவர்களுடன் நெருங்கிப் பழகியவர்களே அல்லது மற்றவர்கள் அறிய முடிவதில்லை. சில சமயம் அவர்களைப்பற்றி மற்றவர்கள் முற்றும் தவறான அபிப்பிராயமே கொண்டிருப்பார்கள். அப்போது அவர்களுடன் நெருங்கிய நட்புக் கொண்டவர்கள்கூட, "அவர்கள் எப்படியோ நினைத்துக்கொண்டு போகட்டும். நமக்கு என் பாடு?" என்று பேசாமல் இருந்துவிட்டால், அப்படிப்பட்டவர்களுடைய நட்பைப் பற்றி நாம் என்ன சொல்லுவது?

எப்போதும் பிறரைப்பற்றி நல்ல வார்த்தைகளே பேசிவிட்டால் போகிறது என்று கருதக்கூடிய சாதுக்களும் நம்மிடையே அநேகர் உண்டு. ஆனால் அத்தகைய மனிதர்கள் பேச்சில் அதிக ரசம் இருக்குமா என்பது தான் சந்தேகம். அவர்கள் மனத்தோடு பேசுகிறவர்களாகவும் இருக்க முடியாது. பழகுவதற்கு உரியவர் அல்லர் என்று நாம் நினைத்துக்கொண்டிருக்கும் ஒருவரிடம் நமக்குத் தெரிந்த வேறொருவர் நெருங்கிப் பழக முயன்றால் அப்போது நாம் அவரை எச்சரிக்கை செய்வதுதான் நியாயம். அப்படிக்கின்றிப் பிறரைப்பற்றி நாம் எதற்குப் பேசவேண்டும் என்ற விரதம் பூண்டிருப்பதில் ஒரு பெருமையும் இல்லை.

சில்லறைத் தவறுகள்கூட இல்லாமல் நம்மில் யாரும் இருக்கமாட்டார்கள். அவைகளைப்பற்றி-நமக்கு வேண்டியவர்கள், அல்லது வேண்டாதவர்கள்தான் ஆகட்டும் - வேடிக்கையாகப் பேசுவதில் என்ன பிசகு?

ஆனல் பிறரை இன்னும் கேவலமாகவும் நகைப்புக்கு இடமாகவும் செய்யக்கூடிய விஷயங்களை - அவைகள் உண்மையாக இருப்பினும் வேண்டுமென்றே அல்லது கவனம் இன்மையினலோ - கொட்டியளப்பது மட்டும் கூடாது என்றுதான் சொல்லவேண்டும்.

பிறரை வாயில் போட்டு அரைத்துக்கொண்டிருப்பதே தம் தொழிலாகக் கொண்டிருப்பவர்களை மனத்தில் வைத்துக்கொண்டு சாதாரணப் பேச்சில்கூடச் சட்ட திட்டங்கள் அமைப்பது அநாவசியம். சரியான முறையில் சம்பாஷிப்பதற்குக் கொள்கை, முயற்சி இவைகளெல்லாம் தேவையல்ல. இயற்கையில் அமைந்த மனப் பண்புதான் வேண்டும்.

நாம் பிறரைப்பற்றிப் பேசுவதற்கு நமக்கு அவர்களிடமுள்ள சிரத்தைதான் காரணம். அவர்கள் எப்படிப் போனல் நமக்கு ஆகவேண்டியது என்ன என்று இருந்தால் அவர்களைப்பற்றிப் பேசமாட்டோம். இத்தகைய மனேபாவத்தைக்காட்டிலும் பிறரைப்பற்றி உற்சாகமாக வம்பளக்கும் குணங்கூடச் சில சமயம் மேலென்றே தோன்றுகிறதல்லவா?

"வம்புப் பேச்சுக்கும் இரண்டு சிறந்த குணங்கள் தாம் அடிப்படையாக இருக்கின்றன. ஒன்று உண்மை; மற்றென்று கற்பனைத் திறன்" என்று ஓர் ஆசிரியர் வேடிக்கையாகக் கூறினராம்.

உலகில் தோஷமற்றவர் என்று ஒருவரும் இருக்க முடியாது. மிகச் சிறந்தவர்களிடத்தும் ஏதாவது ஒரு குறை இருக்கக்கூடும். அவ்வாறே மிகத் தாழ்ந்தவர்களிடத்தும் ஏதேனும் ஒரு குணம் இருக்கலாம். ஆகவே, அந்தக் குறையையோ குணத்தையோ எடுத்துப் பேசுவது ஒரு பெருந் தவருகாது என்று நாம் தைரியமாகச் சொல்லலாம்.

# 2

# சீதை காட்டிய வழி

சிறு வயதில் எப்போதாவது என் தந்தையிடம் நான் மகாபாரதம் படிப்பது உண்டு. பாரதம் படித்துக் கேட்பதென்றால் அவருக்கு மிகவும் பிரியம். சாப்பிட்டு விட்டு ஓய்வு எடுத்துக்கொண்டிருக்கும்போது வேறு முக்கிய வேலை ஒன்றும் இல்லாதிருந்தால் அவருக்குப் பாரதத்தின்மேல் நினைவு செல்லும். உடனே என்னைக் கூப்பிட்டு ஏதாவது ஓர் இடத்தை எடுத்துப் படிக்கச் சொல்லுவார். வால்மீகி ராமாயணத்தையும் அவர் அநுபவிப்பது உண்டு என்றாலும் மகாபாரதத்தைப் படிப்பதில்தான் அவருக்கு இன்னும் அதிக ருசி என்று சொல்ல வேண்டும். அதிலும் பீஷ்மரைப்பற்றிப் படிப்பது என்றால் அவருக்கு உண்டாகும் ஆர்வம் கொஞ்சமல்ல. அதில் அவருக்குச் சலிப்பு ஏற்படுவதே இல்லை. "அவ்வளவு தியாகமும் வீரமும் செறிந்த வாழ்க்கையை வியாசரைத் தவிர வேறு யார் கற்பனை செய்ய முடியும்?" என்று வியந்து பாராட்டுவார்.

உண்மையில் உலக இலக்கியங்களுள் மகாபாரதம் ஓர் அற்புத சிருஷ்டி அல்லவா? அதற்கு இணையாக வேறு எந்த நூலைத்தான் கூற முடியும்? அதில் அடங்கியுள்ள அரிய தத்துவங்களும் நீதிகளும், எவ்வளவோ கடினமான பிரச்னைகளையும் நிர்ப்பயமாக ஆராய்ந்து விளக்கும் முறையும் வேறு எந்த நூலிலும் காண முடியாது என்பது உலகம் முழுவதுமே ஒப்புக்கொண்ட உண்மை. இத்தகைய பிரம்மாண்டமான காவியம் தனிப்பட்ட ஒரு மூளையினின்றும் உதிப்பது சாத்தியமா என்றுகூட மேனாட்டு அறிஞர்கள் வியந்தனர் அல்லவா? அதில் இல்லாத விஷயம் வேறு எதிலும் இல்லை

என்பதனாலேயே அதை ஐந்தாவது வேதம் என்று கூறினர் போலும்.

நம் உணர்ச்சிகளை எழுப்பி அவ்வுணர்ச்சிப் பெருக்கில் நம்மை மெய்ம்மறக்கச் செய்வது ஸ்ரீ ராமபிரானின் கதை. ஆனால் மகாபாரதமோ உணர்ச்சியைக் காட்டிலும் புத்திக்கே அதிக வேலையைக் கொடுத்து நம் சிந்தனா சக்தியையும் தூண்டி எழுப்புவதாக இருக்கிறது. அதற்கு ஏற்றவாறே இரு நூல்களின் கதைப் போக்கும், கதையில் வரும் பாத்திரங்களும் அமைந்திருக்கின்றன என்று கூறலாம்.

திரௌபதியைப்பற்றிப் பேசும்போதும் என் தந்தைக்கு மிகவும் உற்சாகம் உண்டாகிவிடும். "சீதை மிகவும் சாது; கையாலாகாதவள்; ராமன் செய்த கொடுமையைப் பொறுத்துக்கொண்டாள். சீதையைப் போல் இருப்பதால் பிரயோசனம் இல்லை. பெண்கள் என்றால் திரௌபதியைப்போலத்தான் இருக்க வேண்டும். எது வந்தாலும் அவள் தைரியமாக நின்று ஈடு கொடுப்பாள். அந்த அறிவும் ஆற்றலும் அல்லவா நம் நாட்டுப் பெண்களுக்கு வேண்டும்!" என்று கொண்டாடுவார்.

இவ்வாறு திரௌபதியைத் தனியாக உயர்த்திக் கூறுவதற்கு என்ன காரணம் என்று அறிவது கஷ்டமல்ல. நம் நாட்டில் பெண்கள் தமக்குரிய அந்தஸ்தையும் செல்வாக்கையும் இழந்து மிகத் தாழ்ந்த நிலையில் இருந்தார்கள் அல்லவா? அவர்கள் அந்த நிலையில் இருந்தது நாட்டின் முன்னேற்றத்தைப் பெரிதும் பாதித்துவிட்டதாக அறிஞர்கள் வருந்திய காலம் அது. ஆனால் அவர்கள் தாழ்வுக்கு அவர்களே ஒரு விதத்தில் பொறுப்பாளிகள்; அளவுக்கு மிஞ்சிய அடக்கமும் பொறுமையுமே அவர்களை இவ்விதம் அடிமைகளாக்கிவிட்டன என்பது என் தந்தையாரின் கருத்து. 'கல்லானாலும்

கணவன். புல்லானாலும் புருஷன்' என்ற மனப்பான்மையை அவர் அதிகம் பாராட்டுவதில்லை.

உண்மையில் சீதை, திரௌபதி இவ்விருவருடைய குணங்களையும் ஒப்பிட்டுப் பார்க்கும்போது எவ்வளவு வேறுபாடு தோன்றுகிறது? உள்ளத் தூய்மையிலும் கற்பு நெறியிலும் அவர்கள் இருவரும் என்னவோ ஒன்றுதான். அவ்விஷயத்தில் அவர்களிடையே ஏற்றத் தாழ்வு இல்லை. இருவரும் கணக்கற்ற துன்பங்களை அநுபவித்திருக்கிறார்கள். ஆனால் அந்தத் துன்பங்கள் அவர்கள் மாசற்ற தன்மையையோ, மன உறுதியையோ அணுவளவும் பாதிக்கவில்லை என்பது உண்மை. இருப்பினும் சீதாதேவியிடம் நாம் காணும் ஒரு தனிச் சிறப்பு, திரௌபதியைக் காட்டிலும் அவளை மேம்பட்டவளாகச் செய்துவிடுகிறது. அந்தச் சிறப்பு என்னவோ என்று ஆராயவேண்டிய அவசியம் இல்லை. அது சீதாதேவியிடம் மேலோங்கி நிற்கும் அவளது ஸத்துவ குணமே அன்றி வேறல்ல.

ஸ்ரீ ராமபிரானின் தேவியாகிய சீதை பெண்மைக்கு ஓர் எடுத்துக்காட்டாக, மாதர்களுக்கே ஓர் ஒப்பற்ற அணிகலனாக விளங்குபவள். அவளைப்பற்றி நினைக்கும் போது அன்பும் இனிமையுமே வடிவாகிய ஒரு திருவுருவம் நம் கண்முன் தோன்றுகிறது அல்லவா? அவளது புனிதமான சரித்திரம் இந்நாட்டு மக்களின் உள்ளங்களை எவ்வளவு காலமாக வசீகரித்து வந்திருக்கிறது! இதைச் சுவாமி விவேகானந்தர் உணர்ச்சி மிகுந்த மொழிகளில் மிக அழகாகச் சொல்கிறார்.

"உண்மையான ஹிந்துப் பெண்மணி எவ்வாறு இருக்கவேண்டும் என்பதை விளக்குபவள் சீதை. அவள் பவித்திரமான வாழ்க்கையினால்தான் பெண்மையானது தன் முழு உயர்வையும் பெற்றுத் திகழ்கின்றது. ஆயிரக் கணக்கான வருஷங்களாக இவ்விந்தியா தேசத்தில் ஆண், பெண், குழந்தை அனைவர் உள்ளத்திலும் தெய்வமாக

அவள் போற்றப்பட்டு வருகிறுள்; அப்படியே எக்கால மும் உலகிலுள்ள துன்பங்களையெல்லாம் சகிக்கும் பொறுமையே வடிவமாக அவள் ஒப்புயர்வற்று விளங்கு வாள் என்பதில் ஐயமில்லை. உத்தம பத்தினியும் கற்புக்கரசியுமான சீதைதான் எக்காலத்திலும் பெண் மைக்கே ஒரு சிறந்த லட்சியமாக இருப்பவள். நம் புராணங்கள் எல்லாம் காலக் கிரமத்தில் அழிந்து விடலாம். நம் வேதங்கள் மறைந்துவிடலாம். இந் தச் சம்ஸ்கிருத பாஷையே அடியோடு அற்றுப் போய்விட்டாலும், நாட்டில் நாலைந்து இந்துக்கள் மட்டும் இருந்தால், அவர்களிடையே சீதையின் புனிதமான கதை வழங்கிக்கொண்டிருக்கும் என்ப தில் சந்தேகம் இல்லை. அவ்வாறு அவள் நாட்டின் ஒவ்வோர் உயிரோடும் ஒன்ருகி மக்களின் ரத்தத்தோடு ரத்தமாகக் கலந்துவிட்டாள் எனலாம். நாம் எல்லோ ரும் அவள் குழந்தைகளே'' என்கிருர்.

அவர் மேலும், "சீதை இருந்தது நிஜமா அல்லது வெறும் கதையா, நமக்குத் தெரியாது. ஆனுல் எண்ணற்ற துன்பங்களை அநுபவித்த அவளது புனிதமான வாழ்க் கையே நாட்டின் லட்சியமாக விளங்கி வருகிறது. எந் தப் புராணக் கதையும் இவ்வாறு தேசம் எங்கும் ஒரே அடியாக வியாபிக்கவில்லை. எந்த லட்சியமும் மக்களின் உள்ளங்களில் இவ்வளவு வேரூன்றி நிலைத்து அவர்கள் ரத்தத்தோடு ரத்தமாகக் கலந்து ஓடவில்லை. கற்பே உருவானவள் சீதை. அவள் பெயரை உச்சரித்தாலே பாவங்கள் பறந்தோடி விடும். அவள் மரபில் தோன்றிய இந்த நாட்டுப் பெண்கள் ஒவ்வொருவரும் அவள் உன்னத வாழ்க் கையையே பின்பற்றப் பாடுபடுகின்றனர். சொல் லொணுக் கஷ்டங்களை அநுபவித்தபோதிலும் சீதை தன் பொறுமையை இழக்கவில்லை. அப்படிப்பட்ட உத்தமியை அர்த்தமற்ற அபவாதத்துக்கு அஞ்சி ராமர் புறக்கணித்தார் அல்லவா? அது போன்ற அநீதி உல

கில் எங்கேனும் உண்டா? ஆனால் அதற்காக அவள் ராமன்மேல் ஆத்திரமோ வெறுப்போ அணுவளவும் கொள்ளவில்லை. மற்ற எவருக்கும் சாத்தியமல்லாத சீதாதேவியின் இந்தப் பெருஞ் சிறப்பைத்தான் நாம் நம் உள்ளத்தில் போற்றி வருகிறோம். பிறருக்குக் கனவிலும் தீங்கு நினைக்காத குணம் அவளுடையது" என்கிறார்.

ஆனால் அதற்காக எல்லையற்ற துன்பங்களைச் சகித்த சீதை பயந்தவள், தைரியமற்றவள் என்று நாம் கூறிவிட முடியுமா? மூவுலகங்களையும் நடுங்கச் செய்த ராவணனைக் கண்டும் அவள் அஞ்சாது இருக்கவில்லையா? பின்பு ஏன் மீண்டும் வனவாசம் செய்யவேண்டும் என்ற கொடுமையை அவள் வாய்பேசாது ஏற்றுக்கொண்டாள்? அந்தச் சமயத்திலும் அவள் ஏன் தன் பொறுமையைக் கைவிடாமல் இருக்கவேண்டும் என்ற சந்தேகம் தோன்றுகிறதல்லவா? ஏனெனில் கடமையைத் துறப்பதைக்காட்டிலும் உயிருக்கு உயிரான மனைவியைத் துறப்பதுகூட ராமனுக்குப் பெரிதல்ல என்பது அவளுக்குத் தெரியும். அதனால்தான் கணவனின் பொருட்டு அவள் தன்னையே தியாகம் செய்து கொண்டாள்.

சுவாமி விவேகானந்தர் மேலும் கூறுவதைப் பார்ப்போம். "சீதையையும் சாவித்திரியையும் பெற்ற இந்தப் புண்ணிய பூமியில் உலகில் வேறெங்கும் காணக் கிடைக்காத இரக்கமும் அன்பும் சாந்தமும் நிரம்பிய பெண் மணிகள் இன்றும் இருந்துகொண்டுதான் இருப்பார்கள். மேல்நாட்டில் பெண்கள் பெண்களாகவே எனக்குத் தோன்றவில்லை. வண்டிகள் ஓட்டுவது, ஆபீசுக்குச் செல்வது, உத்தியோகம் பார்ப்பதுபோன்ற செயல்கள் அவர்களைப் பெண் ரூபத்திலிருக்கும் ஆண்களாகவே தோன்றும்படிசெய்கின்றன. இங்கேதான் பெண்மையின் அடக்கத்தையும் பணிவையும் கண்குளிரக் காண முடி

கின்றது. இந்தியப் பெண்மணிகள் சீதாதேவியின் அடிச் சுவட்டைப் பின்பற்றி அவள் காட்டிய வழியேதான் செல்லவேண்டும். அந்த லட்சியத்தைவிட்டு இக்காலத்து நாகரிகத்தை அவர்கள் பின்பற்ற முயன்றால் அது பெருந் தோல்வியைத்தான் விளைவிக்கும்'' என்கிறார். அவர் மொழிகளில் எவ்வளவு அழுத்தமும் தீர்க்க திருஷ்டியும் ஒலிக்கின்றன! காந்தி அடிகளும், ராவணனைத் திருண மாக மதித்துப் பேசிய சீதையின் மனவுறுதியைப் போற்றி அவ்வுறுதிதான் நம் பெண்மக்களுக்கு இருக்க வேண்டும் என்று எத்தனையோ தடவை கூறியுள்ளார் அல்லவா?

சீதாதேவி கொடிய துன்பங்களைச் சகித்ததுமட்டும் அல்ல, தனக்குத் தீங்கிழைத்தவர்கள்மீது சிறிதும் துவேஷம் கொள்ளாது இருந்ததோடு அவர்களை மன தார மன்னித்ததாகவும் ராமாயணத்தில் கூறப்படுகிறது. சீதாதேவியின் இந்தத் தனிச் சிறப்பு, அவளது இந்தத் தெய்விகமான இயல்பு திரௌபதியிடம் இல்லை. மன் னிப்பதற்குப் பதிலாகத் தனக்குத் தீங்கிழைத்தவர்களைக் கொன்று பழி வாங்க வேண்டும் என்ற ஆக்கிரகமே அவள் உள்ளத்தில் கொதித்து எழுகின்றது! தன்னைச் சபையில் பலர் முன்னிலையில் அவமானப்படுத்தி யதை நினைக்கும்போது அவள் கோபம் உச்ச நிலையை அடைகின்றது. தன் கூந்தலைப்பற்றி இழுத்தவர்கள் உயிருடன் இருக்கும்வரையில் தான் கூந்தலைத் தூக்கி முடிவதில்லை என்று கடுமையான சபதம் செய்கிறாள். இவ்வாறு தன்னை அவமதித்தவர்கள்மேல் அவள் கொண் டுள்ள தீராப் பகையும் கோபமும் பெண்மைக் குணத் துக்கு முற்றும் விரோதமான உணர்ச்சிகளே அல்லவா?

சீதையின் இயல்பை இதற்கு முற்றும் மாறான தாக வால்மீகி காட்டுகிறார். அசோக வனத்தில் சிறைப் படுத்தி ராவணன் அவளைப் படாத பாடு படுத்தினான். அப்போது அவள் பட்ட துன்பம், புலி வாய்ப்பட்ட

பெண்மான்போல் அவள் தவித்த காட்சி நம் மனத்தை எவ்வாறு உருக்குகின்றது! அதுமட்டுமா? கோர உருவ முள்ள அரக்கிகள் அவளைச் சுற்றிலும் சூழ்ந்து ஒரு நிமிஷமும் ஓய்வில்லாமல் அவளைத் துன்புறுத்தினார்கள். ஆயினும் அவர்கள்பால் அவளுக்குச் சிறிதேனும் கோபமோ, துவேஷமோ உண்டாகவில்லை.

"தேவி, தங்களைத் துன்புறுத்திய இந்தக் கொடிய அரக்கிகளுக்கு என்ன தண்டனை விதிக்க வேண்டும்? தங்கள் விருப்பத்தைக் கூறுங்கள்" என்று அநுமார் கேட்டபோது அவள் என்ன பதில் கூறுகிறாள்?

"அப்பா, குற்றமே செய்யாதவர்கள் உலகில் யாரும் இல்லை. பாவம்! அவர்கள்மேல் என்ன தவறு? அவர்கள் தங்கள் அரசன் ஆணையை அல்லவா நிறைவேற்றினார் கள்?" என்கிறாள்.

தன்னைத் துன்புறுத்தியவர்களைக்கூட மனப்பூர்வ மாக மன்னிக்கும் இந்த உத்தம குணம் - சீதாதேவியின் கருணை ததும்பும் இவ்விளகிய நெஞ்சம் - திரௌபதி யிடம் உண்டு என்று யாரேனும் கூற முடியுமா?

உண்மையில் திரௌபதியிடம் இருவித இயல்பு களே காணப்படுகின்றன என்று கூறலாம். கணவர்பால் அளவுகடந்த பக்தியும் பிரேமையும் கொண்டவளாகவே அவள் தோன்றுகிறாள். கண்ணனின் மகிஷியான சத்திய பாமை, கணவனின் அன்பை முற்றும் கவர முடியாமல் தவிக்கும்போது பாஞ்சாலி கூறும் பதில் அவளை எவ் வளவு மேன்மையாக்குகின்றது! "மாயமோ, மந்திரமோ ஒன்றும் நான் அறியேன். கேவலம் என் அன்பினாலும் இனிய பணிவிடைகளினாலும் அவர்கள் மனத்தைக் குறிப்பாக உணர்ந்து திருப்திசெய்கிறேன். அவர்களுக்கு விருப்பமில்லாத காரியத்தை ஒருபோதும் நான் செய்வ தில்லை. அவர்களுக்கு வேண்டியதைச் செய்யும்போது 'தான்' என்ற எண்ணத்தை அறவே ஒழித்துவிடுகி றேன்" என்று மேலும் பெண்களுக்குரிய தர்மங்களைக்

கூறி, சத்தியபாமையின் தப்பை அவளுக்கு உணர்த்து கிருள். பொறாமைக்கும் அன்புக்கும் உறைவிடமாகிய இந்தத் திரௌபதிக்கும், விராட நகரத்தில் தன்னைச் சாதாரண ஸ்திரீ என்று எண்ணி அவமதித்த கீசகனைக் கொன்று பழி தீர்க்க வேண்டும் என்று ஆத்திரத்துடன் நடுநிசியில் பீமனைக் கண்டு கண்ணீர் விட்டுப் புலம்பித் தன் காரியத்தைச் சாதித்துக்கொண்ட திரௌபதிக்கும் எவ்வளவு வித்தியாசம்? பெண்களுக்கு இயற்கையல்லாத இக்குணம் திரௌபதியின் சிறப்புக்கு ஒரு பெரும் பங்கம் என்றுதான் கூறவேண்டும்.

ஆண்களோடு பெண்களும் சரிநிகர் சமானமாக வாழ்வதற்கு மிகுந்த அறிவும் ஆற்றலும் அவசியந்தான். ‘குடத்தில் இட்ட விளக்குப்போல் அவர்கள் வீட்டுக்குள் அடைந்து கிடைப்பதில் பிரயோசனம் இல்லை; வீட்டுக்கு வெளியிலும் அவர்கள் திறமை நன்கு பிரகாசிக்க வேண்டும்; எதற்கும் ஈடு கொடுக்கும் மனோதிடமும் உற்சாகமும் அவர்களுக்கு வேண்டும்’ என்றெல்லாம் விரும்புவது நியாயமே. ஆயினும் அதற்காக அவர்கள் இதுகாறும் போற்றிவந்த லட்சியத்தைக் கைவிடுவது நன்மை பயக்குமா என்பதையும் அவர்கள் யோசிக்க வேண்டும் அல்லவா? தங்கள் இயல்புக்கும் பண்பாட்டுக்கும் முற்றும் மாறுன ஒரு நாகரிகத்தைப் பின்பற்றுவது முடிவில் தங்களுக்குத் தீமையே விளைவிக்கும் என்பதை அவர்கள் எப்படியும் உணராமல் இருக்க முடியாது.

ஆம், சுவாமி விவேகானந்தர் கூறியதுபோல் தியாகமும் அன்பும் நிறைந்த சீதையின் தூய வாழ்க்கையே அவர்களுக்குப் பெரும் நலனைத் தரும். இன்றும் அதுதான் அணையா மணிவிளக்காக நாட்டில் ஒளி வீசிக் கொண்டிருக்கிறது. அந்தச் சீதையின் அடிச்சுவடுகளைப் பின்பற்றி அவர்கள் காட்டிய வழியில் செல்லுவதே அவர்கள் மேன்மை அடைவதற்குச் சிறந்த சாதனமாகும் என்பதில் என்ன சந்தேகம்?

# 3

# சங்கோசம்

பிறருக்கு ரசமாக இருக்குமா இராதா என்பதைக் கவனியாமல் தம்பாட்டுக்கு ஓயாமல் சளசள வென்று பேசுபவர்கள் உண்டு. அவர்களை ஆங்கிலத்தில் போர்ஸ் (Bores) என்று சொல்லுவார்கள். இப்படிப் பட்ட மனிதர்களைக் கண்டால் சிலருக்கு ஒரே நடுக்கம். எங்கே தம்மைப் பிடித்துக்கொண்டு பேசத் தொடங்கி விடுவார்களோ என்ற பயம் அவர்களுக்குத் தோன்றி விடுகிறது. இத்தகைய பேர்வழி ஒருவரைப்பற்றி ஏ.ஜி.ஜி. என்ற ஆங்கில ஆசிரியர் ஒரு கட்டுரையில் வேடிக்கையாக எழுதுகிறார்.

"வந்தவர் இன்னாரென்று தெரிந்தவுடன் மற்ற வர்கள் தங்கள் பேச்சிலோ ஆட்டத்திலோ மிகவும் மும்முரமாக இருப்பதுபோல் பாவனை செய்வார்கள். 'என்ன, உங்களுக்குத் தெரியுமா?' என்று கேட்டுக் கொண்டு அந்த ஆசாமி ஒரு சிறு கூட்டத்தின் அருகில் சென்று ஒருவரை நோக்கி ஆரம்பிப்பான். அவர் என்ன செய்வார்? இரண்டு நிமிஷம் பொறுத்துப் பார்ப்பார். அவருக்கு வசதியானது ஞாபக சக்தி. அப்போதுதான் தமக்கு வேறு காரியம் இருப்பது தற்செயலாக ஞாபகம் வந்தவர்போல் தம் கைக்கடிகாரத்தில் மணி பார்ப்பார். உடனே தாம் போக வேண்டியிருப்பதை மரியாதை யாகத் தெரிவித்துவிட்டு, பிழைத்தேன் என்று அங்கி ருந்து ஓட்டம் பிடித்துவிடுவார். ஆனால் இதைக் கண்டு அந்தப் பேர்வழி மனம் தளர்ந்து போனால்தானே! அவன் வேறு ஒருவரிடம் உற்சாகமாக என்ன என்று கேட்டுக்கொண்டு தன் புராணத்தைத் தொடங்கிவிடு வான். அதைக் கேட்காமல் அவ்விடம் விட்டு நழுவு வதற்கு அவருக்கும் ஏதாவது காரணம் கிடைத்துவிடும்.

இப்படியே ஒவ்வொருவராகச் சென்று முடிவில் கேட்பதற்கு ஒருவரும் இல்லாமற் போனுல்கூட அந்த மனிதன் ஓய்ந்து போகமாட்டான். அவன் என்றும் ஒரே விதமாகத்தான் தன் பேச்சைப் பேசிக் கொண்டிருப்பான்'' என்கிருர்.

மேற்கூறியவர்களைப் போன்றவர்கள் நம் சமூகத்தி லும் இருக்கிருர்கள். ஆனுல் ரசமில்லாமல் பேசுபவரைக் கண்டால் ஓட்டம் பிடிப்பது என்ற மனப்பான்மை நமக்கு இன்னும் அவ்வளவு ஏற்படவில்லை என்று தோன்றுகிறது. சம்பாஷணை இன்னும் அவ்வளவு நுட்பமான அரிய கலையாக வளர்ச்சி பெருமல் இருப் பதே இதன் காரணமாக இருக்கலாம். நம்மிடையே மேற்சொன்னவர்களைக் காட்டிலும் வேறு விதமான பிரகிருதிகளும் உண்டு. அவர்களைத் தெரிந்துகொள் வதில் நமக்குக் கஷ்டமில்லை. அவர்களைத்தான் சங்கோ சப் பிரகிருதிகள் என்று சொல்லுகிருேம். அவர்கள் தாமாக ஒருவருடனும் போய்ப் பேசமாட்டார்கள். தயங்கி ஒதுங்கி ஒரு மூலையில் சென்று உட்கார்ந்து கொள்வார்கள். மற்றவர்கள் அவர்கள் இருக்கும் இடத்தைத் தேடி வந்துதான் பேசவேண்டும். அப்படிப் பேசாவிட்டால் அவர்கள் மனம் குன்றி வருத்தம் அடை வார்கள். தாம் வருந்துவது நியாயமா? அதற்கு யாரைக் குற்றம் கூறுவது? இவ்விஷயங்களை அவர்கள் சிந்திக்க மாட்டார்கள்.

“இனிது இனிது ஏகாந்தம் இனிது'' என்று தனிமையின் பெருமையைப் புத்தகத்தில்தான் படிக்கி ருேம். உண்மையில் தனிமையை விரும்புவோர் யார் இருக்கிருர்கள்? உலகப்பற்றை ஒழித்துக் கடவுள்பால் மனத்தைச் செலுத்தியிருக்கும் மகரிஷிகள் வேண்டு மானுல் ஏகாந்தத்தை வேண்டலாம். அவர்கள் அதற் காக ஹிமாலயம் போன்ற, மனித நடமாட்டமே இல்லாத பிரதேசத்தை நாடிச் சென்று தனிமையில் ஈசுவரத் தியானம் செய்துகொண்டு காலம் கழிப்பார்

கள். ஆனால் சாதாரண மனிதர்களோ கலகலவென்று எப்போதும் ஜனங்கள் மத்தியில் இருப்பதைத்தான் விரும்புகிறார்கள். அவர்களுக்குத் தனிமையில் சிந்திக்கப் பொழுதில்லை. சிறிது நேரம் தனியாக இருக்க நேர்ந்துவிட்டால் அவர்கள் ஏக்கமுற்றுப் போய்விடுவார்கள்.

இதுதான் தற்கால நாகரிகத்தின் பண்பு. அது மட்டுமல்ல ! பல பேர்களைப் பார்க்க வேண்டும், பலருடன் சதா பழக வேண்டும், அனைவரும் நம்மைக் கண்டு பிரியமாகவும் சந்தோஷமாகவும் பேசுவதற்கு முன்வரவேண்டும் என்பதுதான் எல்லோர் மனத்திலும் உள்ள ஆசை. ஆனால் அவ்வாசை சாதாரண ஆசை அல்ல. அரச பதவியையும் சில சமயம் எளிதில் அடையலாம். ஆனால் எல்லோரும் நம்மிடம் பிரியமாகப் பேசுவதுதான் சில சமயம் மிகவும் அரிதாகிவிடும். இதன் காரணத்தை அறிவது சிரமமில்லை. எல்லோருக்கும் பிடிக்கும்படியான இனிய குணம் நம்மிடம் இல்லாமல் இருக்கலாம் ; அல்லது பிறரிடம் பழகும் விதம் என்னவென்று நமக்குத் தெரியாமலும் இருக்கலாம். தவிர நம் கெட்ட குணங்களே பிறரை நம்மிடம் அணுகவொட்டாமல் செய்துவிடக் கூடும். இக்காரணங்களினால் எல்லோருக்கும் வேண்டியவர்களாக இருப்பதன் அரிய சந்தோஷத்தை நாம் அடைய முடியாதவர்கள் ஆகிவிடுவோம். இது நியாயமே.

ஆனால் கேவலம் தங்கள் சங்கோச குணத்தின் பயனாகச் சிரமப்படுபவர்கள் இருக்கிறார்களே, அவர்களைப் பற்றி என்ன சொல்வது? சங்கோச குணமே அவர்களுக்குப் பெருங்குறையாக அமைகிறது. அவர்கள் சில்லறை மனிதர்களாக இருந்தால் ஒருவாறு சௌகரியமாக இருக்கும். அப்படிக்கின்றி, சங்கோச சுபாவத்துடன் கொஞ்சம் கண்ணியமான தோற்றம் உடையவர்களாயும் இருந்துவிட்டால் கேட்க வேண்டுமா ? நிலைமை இன்னும் மோசமாகி விடுகிறது. சாதா

ரண மனிதர்கள் எப்படி இருந்தாலும் எவரும் கவனிக்க மாட்டார்கள். அவர்கள் ஒரு விதத்தில் நிம்மதியாக இருந்துவிடலாம். ஆனால் மேற்சொன்ன சங்கோசப் பிரகிருதிகளோ இரண்டும் கெட்ட நிலையில் திண்டாடு கிறார்கள். அவர்களைக் கவனிக்கவும் முடியாது; கவனிக்காமல் இருக்கவும் முடியாது.

அவர்கள் ஓரிடத்துக்கு வரும்போது என்ன செய் கிறார்கள் என்று பார்ப்போம். ஸ்ரீமதி சேகர் வருவதை மற்றவர்கள் பார்த்தும் பாராதவர்கள்போல் ஒருவரோடு ஒருவர் பேசிக்கொண் டிருக்கிறார்கள். யாராவது கொஞ்சம் சிரித்த முகத்துடன் பார்த்துவிடலாம். ஸ்ரீமதி சேகருக்கு மனம் சமாதானமாகிவிடும். ஆனால் அதை ஏனோ ஒருவரும் செய்வதில்லை. மனத்தை ஒருவாறு திடப்படுத்திக்கொண்டு தைரியமாக ஐந்தாறு பெயர்கள் பேசிக்கொண்டிருக்கும் இடத்தில் சென்று உட்கார்ந்துகொள்கிறாள். சுத்தமான நீல ஆகாயத்தில் திடீரென்று கரிய மேகம் ஒன்று தோன்றினால் எப்படி எங்கும் ஒளி குன்றுமோ அப்படியே அவள் வரவினால் அங்கும் உடனே நிலைமை மாறுகிறது. கலகலவென்ற பேச்சும் சிரிப்பும் சட்டென்று குறைந்துவிடுகின்றன. மரியாதையாக இரண்டொரு வார்த்தைகள் பேசுவார் கள். பிறகு மெல்ல ஒவ்வொருவராக அங்கிருந்து நழுவி விடுவார்கள். சிறிது நேரத்துக்கெல்லாம் ஸ்ரீமதி சேகர் தான்மட்டும் தனியாக உட்கார்ந்திருப்பதை உணரு கிறாள். அப்போது அவளுக்கு எப்படி இருக்கும்?

அந்தக் கூட்டத்தில் அதே சமயத்தில் கமலா வருகிறாள். அவள் வரும் விதமே வேறாக இருக்கிறது. அவளைக் கண்டதும் எல்லோரும் புன்னகையுடன் வரவேற்கிறார்கள். அதன் ரகசியம் என்ன? அவளிடம் என்ன விசேஷம் இருக்கிறது? கமலாவின் சிரித்த முகமும் உற்சாகமுமே அதற்குக் காரணம். ரமணீய மான நந்தவனத்தில் பிரவேசிக்கும்போது உள்ள குதூகலமும் களிப்பும் அவளிடம் காணப்படுகின்றன.

கமலாவுக்குச் சங்கோசம் இல்லை, பிறர் தன்னைப்பற்றி என்ன நினைக்கிறார்களோ என்ற கவலையே அவளுக்கு இல்லைபோல் தோன்றுகிறது.

"சரிதான்! சங்கோசமும் கலகலப்பும் நம் இஷ்டத்துக்கு உட்பட்டவையா? சுபாவத்தை என்ன செய்ய முடியும்?" என்கிறீர்களா? உண்மையே! சுபாவம் பிறவியில் ஏற்படுகிறது. அதை ஒன்றும் செய்ய முடியாது என்பதை ஒப்புக்கொள்கிறேன். ஆனால் இந்தச் சங்கோச குணத்தை மட்டும் ஒருவாறு நாமே மாற்றிக்கொள்ளலாம் என்று தோன்றுகிறது. சதா நம்மைப்பற்றியே நினைத்துக்கொண் டிருப்பதிலிருந்துதான் இந்தக் குணம் உண்டாகிறது. அந்தப் பழக்கத்தை ஒழிக்க வேண்டும். அதைச் சற்று விட்டுவிட்டால் பிறகு நம்மை அறியாமலே வேறு மனிதர்கள் ஆகிவிடுவோம்.

சங்கோசத்தினால் நம் சுபாவமான நல்ல உணர்ச்சிகளையும் சில சமயம் இழந்துவிடுகிறோம். அதனால் பிறர் நம்மைத் தவறாக நினைக்கவும் இடம் உண்டாகிறது.

நம்மை நாம் மறக்கக் கற்றுக்கொள்ள வேண்டும். அப்போதுதான் பிறருடன் சகஜமாகப் பழகுவது எளிதாகும். நம் தோற்றமோ ஆடைகளோ இவை போன்ற வேறு விஷயங்களோ பிறர் மனத்தில் படும் விதத்தைப் பற்றி நாம் கவலைப்படும்போது தாராளமாகப் பேசுவது சாத்தியமா ? ஆனால் அவைகளைப்பற்றிய ஞாபகத்தை நாம் சிறிது அகற்றிவிட்டால் பிறரும் அவைகளை அவ்வளவு கவனிக்க மாட்டார்கள். நம்மைப்பற்றியேனும் பிறரைப்பற்றியேனும் ஒரு குற்றமும் தோன்றாத குழந்தை போன்ற மனப்பான்மையை நாம் உண்டாக்கிக்கொள்ள முடியாது. ஆனால் நம் குறைகளைப் பாராட்டாமல் மற்றவர்களுடன் சந்தோஷமாகவும் சகஜமாகவும் பழகக் கற்றுக்கொள்வது எப்படியும் நல்லதல்லவா?

# 4

# பெயரும் பொருத்தமும்

ஒரு சம்பவம்; ஆனால் அது எனக்குச் சற்றுத் திகைப்பை உண்டாக்கிவிட்டது. திகைப்பு என்றால் திடுக்கிடும்படியானது என்று சொல்வதற்கில்லை. ஒரு வித வியப்பு; அவ்வளவுதான். அந்த வியப்பும் ஒரு கண நேரந்தான் நின்றது. பிறகு அதுவே முடிவில் ஒரு வேடிக்கையாக மாறிவிட்டது.

கதைக்குக் காலுண்டா என்று சொல்லுகிறோம் அல்லவா? (பொருத்தமில்லாமலும் அசம்பாவிதமாகவும் உள்ள கதைகளைப்பற்றி நாம் அவ்வாறு கூறுவது இயற்கை. ஆனால் நடந்தது நடந்தபடியே எடுத்துச் சொல்லும் தற்காலத்து நவீனங்கள் விஷயத்தில் அந்தச் சொல் பொருந்தாது.) அதுபோலவே நம் மனத்தில் சில சமயம் எழும் எண்ணங்களுக்கும் அர்த்தமோ காரணமோ இருப்பதில்லை. ஏன் அவ்விதம் தோன்றிற்று என்று கேட்டால், அதற்குப் பதில் சொல்ல முடியாது. தன்போக்கில் எதைப்பற்றியாவது நினைத்துக்கொண்டிருப்பதில்தான் மனசுக்குத் திருப்தி. எதற்கெடுத்தாலும் காரியத்தோடும் காரணத்தோடுந்தான் யோசிக்க வேண்டும் என்ற கட்டாயத்தை அது உணருவதில்லை. இது மனித இயல்பு. அது அவ்வாறு இல்லாவிட்டாலும் இயற்கைக்கு விரோதந்தான் அல்லவா? பிறரை ஒன்றும் பாதிக்காத வரையில் மனசு தன்பாட்டில் எதையோ நினைத்துக்கொண்டு போகட்டுமே! என்ன தவறு?

ஏதோ சம்பவத்தைப்பற்றிச் சொல்ல வந்தேன் அல்லவா? அதை முதலில் சொல்லிவிடுகிறேன். அதில் சம்பந்தப்பட்டவர் ஓர் இளைஞர். எனக்கு ஏற்பட்ட

வியப்புக்குத் தாமே காரணம் என்பதை அவர் அறியார். உண்மையில் அவர் அப்பாவி. தம்மைக்காட்டிலும் தம் பெயரே என் திகைப்புக்கு முக்கிய காரணம் என்பதையோ அல்லது நானே ஒரு விந்தையான மனப் போக்குடையவள் என்பதையோ அவர் எவ்வாறு ஊகிக்க முடியும்? ஒரு பெயர்; அப் பெயரில்தான் அவ் விந்தை ஏற்பட்டது. அந்தப் பெயர் இல்லை என்றால் எனக்கும் அத்தகைய திகைப்பு உண்டாகியிருக்காது.

பெயரைக் கேட்டதிலிருந்து நான் மனத்தில் கற்பனை செய்துகொண்ட உருவத்துக்கும், எதிரே தோன்றிய உண்மையான உருவத்துக்கும் சற்றேனும் சம்பந்தம் இருக்க வேண்டுமே? இல்லை. ஏதோ ஒரு வயதான பத்தாம் பசலிப் பேர்வழி என்று நான் அலட்சியமாக எண்ணினேன். ஆனால் நான் கண்ணெதிரே கண்ட தோற்றமோ ஒரு கணம் என்னைத் திகைக்கச் செய்து விட்டது. பஞ்ச பாண்டவர்களுடைய மனைவி திரௌபதி அல்ல சீதைதான் என்றால் எப்படி இருக்குமோ அத்தகைய கலக்கந்தான் அப்போது எனக்கு ஏற்பட்டது. மிக மிக நாகரிகமான உடையணிந்து, பளிச்சென்ற மூக்குக் கண்ணாடியும் வசீகரமான பேச்சும் தோற்றமும் உடையவராக இருந்தார் அந்த இளைஞர். 'இப்படிப் பட்ட நாகரிக இளைஞருக்கு இவ்வளவு கர்நாடகப் பெயரா?' என்று என்னால் அப்போது பரிதபிக்காமல் இருக்க முடியுமா? சொல்லுங்கள். அவர் இளமைக்கும் வசீகரமான தோற்றத்துக்கும் உகந்த பெயராக இருந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்! 'பொருத்தமில்லாத பெயரே அவருக்குப் பெருங் குறையாகி விட்டதே' என்று சொல்லத் தோன்றும். ஏனெனில் இப்படி ஆளைப் பார்ப்பதற்கு முன்பே அவரைப்பற்றி அலட்சியமாக நினைக்க இடம் உண்டாகிவிட்டதல்லவா? இரவுக்கும் பகலுக்கும் எவ்வளவு ஒற்றுமையோ அவ்வளவு ஒற்றுமைதான் அவருக்கும் அவர் பெயருக்கும் அமைந்திருந்தது.

இந்தப் பெயர் சம்பந்தமாக முற்றும் வேறு விதமான உணர்ச்சி எனக்கு மற்றொரு சமயத்தில் ஏற்பட்டது. அதையும் இங்கே சொல்லிவிடுகிறேன். ஓர் இளம் பெண்; அவளுக்கு மிக்க நவீனமான அழகிய பெயரைத்தான் இட்டிருந்தார்கள். ஆனால் அந்தப் பெயருக்கு ஏற்றவளாக அவள் இருந்தால்தானே! அவளுக்கும் அவள் அழகிய பெயருக்கும், மலைக்கும் மடுவுக்கும் உள்ள பேதம் காணப்பட்டது. விலையுயர்ந்த ஓர் ஆபரணத்தை அணிந்த பிச்சைக்காரப் பெண் ஒருத்தி எவ்வளவு சந்தேகத்துக்கு இடமாக விளங்குவாளோ அவ்வாறுதான் இந்தச் சிறு பெண்ணும் தோன்றினாள். பாவம்! அவள் அழகிய பெயரே அவளுக்குப் பெரும் வினையாயிற்று. உண்மையில் காமு, கற்பகம் என்பவை போன்ற சாதாரணப் பெயராக இருந்தால் அவள் குரூபம் எனக்கு இவ்வளவு அதிகமாகப் பட்டிராது. வாழ்நாள் முழுவதும் இப்படிப் பிறர் பொருளை அபகரித்தது போன்ற நிலைமையை அநுபவிக்காமல், அவளும் அப்போது நிம்மதியாக இருக்கலாம் அல்லவா? அந்தப் பேதைப் பெண் என்ன செய்வாள்? இந்தச் சிறந்த பெயரைத் தாங்குவதற்கு ஏற்ற ரூபம் நம் குழந்தைக்கு இல்லையே என்பதை உணராத பெற்றோர்களை அல்லவா நாம் குற்றம் கூற வேண்டும்?

'ஏது, ஒரு பெயரைப்பற்றி இவ்வளவு கற்பனையா?' என்று அலுத்துக்கொள்கிறீர்களா? அப்படியல்ல. பெயரிலும் ஓர் அழகும் பொருத்தமும் இருக்க வேண்டாமா என்றுதான் கேட்கிறேன்.

பெயரில் என்ன இருக்கிறது? ரூபத்தில் என்ன இருக்கிறது? குணம் அல்லவா பெரிது என்கிறோம். ஆனால் இந்த அலங்காரமான பேச்செல்லாம் புத்தகத்தில் தான். வாழ்க்கைக்கு ஒன்றும் ஒட்டி வருவதில்லை. பார்க்கப்போனால் பெயரிலும் ரூபத்திலுந்தான் எல்லா விசேஷமும் இருக்கிறதென்றுகூடத் தோன்றுகிறது.

ஒரு மனிதனுடைய ஊர், பிறப்பு, தொழில் எல்லாவற்றையும் ஒருவாறு அவன் பெயரிலிருந்தே அறிந்து கொள்கிறோம். அது மட்டுமா? ஊன்றிப் பார்க்கும் போது, இந்த ஒன்றுமில்லாத வெறும் பெயர் அல்லவா மக்களிடையே உள்ள வேற்றுமைகளுக்கும் சச்சரவுகளுக்கும் ஒரு விதத்தில் மூலகாரணமாகிறது என்று சொல்ல வேண்டும்! ஊர், பெயர் வேறாக இருந்தாலும், கடவுள் படைப்பில் மனிதர் எல்லோரும் ஒன்று என்ற அறிவு அவர்களுக்கு இல்லையே! அந்த வேற்றுமையை ஒரு கணம் மறந்தால், அப்புறம் உலகம் இந்த நிலையில் இருக்குமா?

பெயரையும் பொருத்தத்தையும்பற்றிச் சொல்லும் போது எனக்கு வேறொரு விஷயம் ஞாபகம் வருகிறது. சமீபத்தில் ஒரு பிரசங்கத்துக்குப் போயிருந்தேன். பிரசங்கம் என்றால் அதற்கு வருவோர் சாதாரணமாக யார் என்றுதான் நமக்குத் தெரியுமே! சங்கத்தின் காரியதரிசி, அன்றைக் கூட்டத்தின் தலைவர், பிரசங்கம் செய்பவர், அவருக்கு மிகவும் வேண்டியவர்கள் ஆக மொத்தம் பொறுக்கியெடுத்தாற்போல் பத்துப் பேர்களுக்குமேல் இருந்தால் ஆச்சரியம் அல்லவா? ஆனால் அன்று அப்படி இல்லை. நல்ல கூட்டம். பிரசங்கம் நன்றாக இருந்தது. விஷயமும் எனக்குப் பிடித்ததாக இருந்தது. பேசியவர் எவ்வளவோ கவலையோடும் சிரத்தையோடும் விஷயங்களைக் குறித்துக்கொண்டு வந்து மிக்க தெளிவாகவும் அழகாகவும்தான் பேசினார். ஆனால் ஒரே ஒரு விஷயம் பேச்சின் சிறப்பைக் கொஞ்சம் குறைத்துவிட்டது. அது என்னவென்றால். பிரசங்கத்தின் தலைப்புத்தான். துரதிருஷ்டவசமாக, விஷயமும் அதன் தலைப்பும் ஒன்றுக்கொன்று அவ்வளவு பொருத்தமாக இல்லை; அந்தக் குறை ஒன்றுதான். ஆனால், அது கேட்பவர்களிடையே சற்று அதிருப்தியையும் ஏமாற்றத்தையும் உண்டுபண்ணாமல் இருக்க முடியுமா? கூட்டத்துக்குத் தலைமை வகித்தவரும் கடைசியில் தாம் பேசியபோது பிரசங்கத்தில் இருந்த

குறையை, அதாவது தலைப்பின் பொருத்தமின்மையைக் குறிப்பாக எடுத்துக்காட்டினார்.

சுமார் ஒரு மணி நேரம் பேசுவதற்குக்கூட ரசமாகவும் கோவையாகவும் உள்ள விஷயங்கள் கிடைத்துவிடும். அவ்விஷயங்களைப் பளிச்சென்று எடுத்துக்காட்டக்கூடிய தலைப்பு அமைவதுமட்டுந்தான் சில சமயம் கடினமாகி விடும். குன்றிலிட்ட விளக்குப்போல் தலைப்பிலுள்ள அந்த இரண்டு சொற்கள் அல்லவா கீழே கூறப்படும் விஷயங்களை விளக்கிக் காட்டுவதாக இருக்க வேண்டும்? அந்த ஒளி இல்லை எனில், எவ்வளவு அரிய கருத்தானாலும் மங்கிவிடாதா?

இந்தத் தலைப்பின் மகிமையைப் பத்திரிகைக்காரர்களும் விளம்பரக்காரர்களும் நன்கு அறிந்திருக்கிறார்கள். பத்திரிகைத் தொழிலில் ஏற்படும் வெற்றி தோல்விகளை நிர்ணயிப்பதுகூடக் கட்டுரையின் தலைப்பிலுள்ள சிறு வாக்கியங்களின் சக்திதான் என்று கூறலாம். இப்போது, 'பெயரில் என்ன இருக்கிறது? விஷயம் அல்லவா முக்கியம்?' என்று யாரேனும் சொல்ல முடியுமா?

பிரசித்தி பெற்ற பெயர்களைச் சொன்னால் உடனே காரியம் சாதகமாவதை நாம் அநுபவத்தில் காண்கிறோம். அவ்வாறே சில பெயர்களின் சம்பந்தத்தினால் நமக்கு எவ்வளவோ சிரமங்களும் ஏற்படுகின்றன.

மனிதர்களின் பெயருக்கே இவ்வளவு வன்மை இருக்கும்போது, பகவானின் நாமத்தைப்பற்றிக் கேட்க வேண்டுமா? ராம நாமத்தின் மகிமையைப்பற்றிக் கூறும்போது துளசிதாஸர், 'ஸ்ரீ ராமபிரான் ஒரு ரிஷி பத்தினியைக் கடைத்தேறச் செய்தார். அவனுடைய திருநாமமோ தூர்ப்புத்தியினால் தீயவழிச் சென்ற கோடிக் கணக்கான பெண்களை நல்வழிப்படுத்தியுள்ளது' என்றும், 'ஸ்ரீ ராமன் முறித்தது ஒரு சிவ தனுசு. இவ்வுலக இயல்பாயுள்ள பிறவித் துயர் எல்லாம் முறியச் செய்

வது ராம நாமத்தின் பெருமை' என்றும் வெகு அழகாகச் சொல்லுகிறார்.

நமக்குப் பின் நம்முடைய அநித்தியமான இவ்வுடல் அழிந்துபோன பின், நிற்கக்கூடியது எது? நம் பெயரே அல்லவா? அதுதான் பிற்காலம் நம் வாழ்க்கையின் சின்னமாக விளங்குவது. அதைக் காப்பாற்றவேண்டியதல்லவா நம் கடமை? அதற்காக அன்றோ உண்மையில் நாம் பாடுபட வேண்டும்? அப்படியிருக்கப் பெயரில் ஒன்றும் இல்லை என்று யார் சொல்ல முடியும்?

# 5

# பொன்னகையும் புன்னகையும்

ஆங்கில ஆசிரியர் ஒருவர் ஓரிடத்தில் வேடிக்கையாக, 'பத்துப் பன்னிரண்டு பக்கங்களுக்கு வேண்டிய விஷயங்கூட விரைவில் சுலபமாக எழுதிவிடலாம். ஆனால் அவ்விஷயங்களைப் பளிச்சென்று எடுத்துக்காட்டும் தலைப்பு அமைவது மட்டும் சில சமயம் கடினமாகிவிடும்' என்று சொல்லுகிறார். இது பிரபல எழுத்தாளர்களுக்கு நேரக்கூடிய நிலைமை; என்போன்றவருக்கு அல்ல. என் போன்றவருக்கு ஏற்படக்கூடிய சிரமம் என்னவென்பது நான் சொல்லாமலே விளங்கும்.

நவநாகரிக முறைப்படி அன்றன்று புதிது புதிதாக மாறிக்கொண்டு வரும் நகைகளைப்பற்றி வேண்டுமானால் எவ்வளவோ ரஸமான விஷயங்கள் சொல்ல முடியும். ஆனால் புன்னகையைப்பற்றிச் சொல்வதற்கு என்ன இருக்கிறது என்று தோன்றலாம். இந்நாளில், 'பாஷனைப்' பற்றிய குறிப்புகளும் கட்டுரைகளும் வெளி வராத பத்திரிகையே இல்லை. அவைகளைப் படிப்பதில் மனம் சலிப்படையும் பெண்ணும் அருமை என்றுதான் சொல்ல வேண்டும். மேல்நாட்டு நாகரிகத்தினின்றும் நமக்குக் கிடைத்திருக்கும் நூதனக் கலை இது. இதில் தேர்ச்சி பெற்று முன்னணியில் நிற்க வேண்டுமென்று அநேகம் பேர் மிகுந்த பிரயாசை எடுத்துக்கொள்கிறார்கள். அவர்களுக்கு அது வாழ்க்கையின் முக்கிய லட்சியமாகவே விளங்குகிறது. 'பாஷனில்' பின்தங்கி விடப் போகிறோமே என்ற கவலை மட்டும் ஒவ்வொருவருக்கும் இருக்கத்தான் இருக்கிறது.

"பொன் நகை" என்று சொல்லும்போது ஒரு சந்தேகம் உண்டாகிறது. வாழ்க்கைக்கு நகைகள் அத்தியாவசியமா? நகைகள் இல்லாத குறை பெருங் குறையாக இருப்பானேன்? நகைகள் அணிவதில்தான் வாழ்க்கையின் சந்தோஷம் முற்றும் ஏற்படுகிறதா? இக் கேள்விகளுக்குப் பதில் எதுவாயினும் பொன் நகை இல்லாத பெண்ணுக்கு அவ்வாறுதான் தோன்றுகிறது. 'ஆடைகளும் ஆபரணங்களும் இருந்துவிட்டால் பிறகு சந்தோஷத்துக்குக் குறைவேது?' என்றுதான் அவள் எண்ணுகிறாள். ஆனால் பெட்டி நிறையப் பொன் நகைகள் அதாவது இக்காலத்துக்கு ஏற்றபடி வைரநகைகள் இருந்தாலும் அவைகளை அணிய மன உற்சாகம் இல்லாமல் இருக்கலாம். இதை அவள் யோசிப்பதில்லை.

அழகுக்காகத்தான் நகைகள் ஏற்பட்டிருக்கின்றன. பெண்களுக்கு அழகும் வேண்டாம், ஆபரணங்களும் வேண்டாம் என்று யார் சொல்லுவார்கள்? ஒரு நண்பர் மிகவும் ரஸமாக ஓரிடத்தில், "நம் பெண்மணிகள் நகை அணிந்துகொள்வதெல்லாம் வெறும் ஆடம்பரத்துக் கல்ல, இயற்கை அழகை எடுத்துக்காட்டத்தான். ஒட்டியாணம் இடையின் ஒடுக்கத்தைக் காட்டும்; கல்லட்டிகை கழுத்தின் அழகை எடுத்துக்காட்டும்" என்று எழுதியிருக்கிறார். 'ஜில்க் ஜில்க்' என்று பாதசரத்தின் நாதம் கேட்பதிலிருந்து ஒரு பெண்மணி ஜோராக நடந்து வருகிறாள் என்று அறிகிறோம். அதுமட்டுமா? பாதசரத்தின் சப்தத்திலிருந்து, பெண்மணி மெள்ள அன்ன நடை நடந்து வருகிறாளா, வேகமாக வருகிறாளா, அல்லது ஓடியேதான் வருகிறாளா என்பவற்றையெல்லாம் அறிந்துகொள்ளலாம். இதனால் இயற்கை அழகு எவ்வளவு இருந்தாலும் செயற்கை அழகும் வேண்டியதுதான் என்று தெரிகிறது. ஆனால், 'அழகு உள்ளவர்களுக்குத்தானே நகைகள் அவசியம்? அழகு இல்லாதவர்களுக்கு வேண்டாமே' என்றால் அழகு இல்லாதவர்கள், 'நமக்கு எதற்கு?' என்று

பேசாமல் இருக்கிறார்களா? இந்த நகைகள் விஷயத்தில் மட்டும் அம்மாதிரி சந்தேகமெல்லாம் நமக்கு இல்லை. அழகு இருக்கிறதோ இல்லையோ, நகைகள் இருந்தால் போதும் என்ற திருப்தியே சிலருக்கு. ஆடை ஆபரணங்களில் மனம் பறிகொடுக்காத பெண் உண்மையில் உலகில் அருமை என்றே சொல்லலாம். இது பற்றித்தான் அசோக வனத்தில் இருந்த சீதா தேவியைக்கூட ராவணன், "என்னைப் பதியாகக் கொண்டால் மூவுலகங்களிலும் கிடைத்தற்கரிய வஸ்திரங்களையும் பூஷணங்களையும் அடைந்து அநுபவிப்பாய்" என்று கூறி ஆசை காட்டுகிறான். ஆனால் கற்பையே சிறந்த பூஷணமாகக் கொண்ட தேவி இவைகளைக் கண்டு எவ்வாறு மயங்குவாள்?

"குன்றிமணி பொன் பூட்டிக்கொள்ளக் கோடி தவம் செய்திருக்க வேண்டும்" என்றெல்லாம் நகை அணிவதைப்பற்றி வயதான பாட்டிமார்கள் சொல்லக் கேட்டிருப்போம். ஒன்று நிச்சயம்; நகை அணிவதற்கு அழகு அவசியமானாலும், ஆகாவிட்டாலும் பணம் அவசியம் என்பது மட்டும் எல்லோருக்கும் தெரியும். ஆனால் அதற்கு வழியில்லாதவர்கள் எங்கே சும்மா இருக்கிறார்கள்? 'அந்த வைர லோலக் நாம் அணியக் கொடுத்து வைக்கவில்லையே!' என்றுதானே ஏங்கி வருந்துகிறார்கள் ?

வைர லோலக் முகத்துக்கு அழகுதான்; அதில் சந்தேகமில்லை. ஆனால் அதைக் காட்டிலும் சிறந்த பூஷணம் வேறு ஒன்று இருக்கிறது. அது முகத்துக்கு யாவற்றையும்விட மேலான ஒளியைக் கொடுக்கக் கூடியது என்பதை மறந்துவிடுகிறார்கள். அதை அணிவதற்குப் பணம் தேவை இல்லை. அது ஏழை, பணக்காரர்கள் அனைவருக்கும் உரியது. பொன் நகை முகத்தின் அழகை மட்டும் எடுத்துக்காட்டும். ஆனால் புன்னகை அகத்தின் அழகையும் சேர்த்துக் காட்டும்

அல்லவா? சிரித்த முகத்தைக் காணும்போதுதான் பார்ப்பவர்களின் மனம் களிப்படைகிறது. இதனால் தான் கவிகள், 'வெண்ணிலவனைய புன்னகை பொலியும் மதிமுகம்' என்றெல்லாம் வருணித்துக் கூறியிருக்கிறார்கள்.

ஆனால் எப்போதும் சிரித்த முகத்துடன் இருப்பதற்குப் பணம், நகை இரண்டும் அவசியமில்லை என்றாலும் அவைகளுக்குப் பதிலாகக் குணம் அவசியமாக இருக்கிறது. பணம் இல்லாவிட்டால் நகைகளை இரவல் வாங்கியாவது அணிந்து நம் ஆசையைத் தீர்த்துக்கொள்ளலாம். ஆனால் புன்னகையை அணிவதற்குக் குணத்தை நாம் எப்படி இரவல் வாங்க முடியும்? அது நம்முடன் பிறந்ததல்லவா? அப்போது பொன்னாலாகிய நகை அணிந்த பெண்ணைக் காட்டிலும் புன்னகை அணிந்த பெண் நூற்றில் ஒருத்தியே, ஆயிரத்தில் ஒருத்தியே என்று சொல்லும்படி அவ்வளவு அருமையாகிவிடுவாள். அத்தகைய பெண், 'பட்டுப் பட்டாடைகள் இல்லையே! ஆபரணங்கள் இல்லையே!' என்று வருந்தமாட்டாள். அதற்குப் பதிலாகத் தன் மலர்ந்த முகத்தினாலும் இனிய மொழிகளினாலும் பிறர் உள்ளங்களைக் கவர்ந்துவிடுவாள்.

கணவன் அழகுள்ள மனைவியைத்தான் கேட்கிறான். என்றாலும் கடைசியில் அவனுக்கு ரூபத்திலும் அலங்காரத்திலும் சிறந்த மனைவியைக் காட்டிலும், மனத்துக்கு இசைந்தபடி நடக்கும் குணமுள்ள மனைவியே போதும் என்று தோன்றிவிடுகிறது. அழகுக்குத் தன்னை மறக்கும் சக்தி இல்லை; பிறர் எவ்வளவு புகழ்ந்தாலும் திருப்தியும் இல்லை..

தற்காலத்தில் இயற்கை அழகைக் காட்டிலும் செயற்கை அழகுக்கே மதிப்பு அதிகம். நவநாகரிகம் முதிர்ந்த பெண்களாக இருந்தால் அலங்கரித்துக்கொள்வதில் மிகுந்த சிரத்தை கொண்டவர்களாகத்

தான் இருப்பார்கள். ஏனெனில் அதில் ஒரு சிறு குறை தென்பட்டாலும் பிறர் மதிப்புக் குறைந்து விடுமே என்ற கவலை அவர்களுக்குப் பெரிது. ஒரு விநாடியைக்கூட மதித்துக் கணக்கிட்டிருக்கும் ரேடியோ நிலையத்தில்தான் நாம் காலத்தின் அருமையை முற்றும் உணருகிறோம். ஆனால் மணிக் கணக்காக அலங்காரத்தில் மூழ்கியிருக்கும் பெண்ணுக்கு நேரத்தைப்பற்றிக் கவலை இல்லை. வேண்டுமானால் காலந்தான் அவளுக்காக நின்று செல்ல வேண்டும். தன்னை அலங்கரித்துக்கொள்ளும் பணியில் பணம், நேரம் இரண்டையும் தாராளமாகச் செலவு செய்யக் கூடியவர்கள் அவ்வாறு செய்யட்டும்; அப்படிச் செய்ய இயலாதவர்கள் அதற்காக மனம் உடைய வேண்டுமா என்றுதான் நமக்குத் தோன்றுகிறது.

தன் குறைகளைப் பாராட்டாமல் சந்தோஷமுள்ள மனத்துடன் இருப்பதில் லாபம் உண்டு. சிரிக்கக் கற்றுக்கொண்டால் எவ்வளவோ கவலைகளை மறக்கலாம். ஆங்கிலத்தில், 'சிரித்தால் சேர்ந்து சிரிக்க எவ்வளவோ பேர் இருப்பார்கள். அழுதால் நாம் தனியாகத்தான் அழவேண்டும்' என்ற ஒரு பழமொழி உண்டு. இன்பம் துன்பம் இரண்டும் நம் எண்ணத்தில் தான் இருக்கின்றன. நாம்தான் ஒன்றைச் சந்தோஷமாகவும் மற்றொன்றைப் பெரிய துக்கமாகவும் நினைத்துக்கொள்ளுகிறோம். நம்மைப்பற்றிய நினைவை விட்டுவிட்டுப் பிறருக்காகக் கஷ்டப்படுவதில் நிஜமான சுகம் இருக்கிறது. அதைத் தெரிந்துகொள்ள வேண்டும். இவ்வுண்மையை நிலைநாட்டுவதற்கல்லவா தம் வாழ்நாட்களைப் பிறர் பொருட்டு அர்ப்பணம் செய்யும் புண்ணியாத்மாக்கள் உலகில் எப்போதும் தோன்றிக்கொண்டிருக்கின்றனர்? நம் அற்பக் குறைகளை மறந்து பெரிய லட்சியங்களைக் கைக்கொள்ளுவோமாக.

## ௬

# யாம் அறிந்த மொழிகளிலே

ஒரு சமயம் எனக்கு மிகவும் தெரிந்தவரான ஓர் அம்மாளுடன் பேசிக்கொண்டிருந்தேன். நடுவில் பேச்சு ஏதோ பாஷையைப்பற்றித் தொடங்கியது.

"ஆங்கிலம் சரளமான பாஷை. எந்த விஷயத்தையும் ஆங்கிலத்தில் சொல்லுவதென்றால் எளிதாகச் சொல்லிவிடலாம்" என்று சொன்னேன். அந்த அம்மாள் அதை மறுத்துக் கூறவில்லை. ஆனால் பொதுவாகப் பாஷைகளைப் பற்றிச் சொல்லும்போது, "மலையாளம் அழகான பாஷை; கேட்க வெகு இனிமையாக இருக்கும்" என்று சொன்னார்.

எனக்கு அதைக் கேட்கச் சிரிப்பு வந்தது. ஏனெனில் அதுவரையில் மலையாளம் ஓர் அழகான பாஷை, கேட்க இனிமையாக இருக்கும் என்று நான் எண்ணியதே இல்லை. அதற்கு மாறாக யாராவது மலையாளம் பேசுவதைக் கேட்டால், "இது என்ன பாஷை!" என்று நான் பரிகாசமாக நினைத்துக்கொள்வது வழக்கம். விகடம் பண்ணுகிறவர்கள் கூட மலையாளத்தில் பேசியே எல்லோரையும் சிரிக்கவைப்பது உண்டல்லவா? இப்படிச் சொல்லுவதனால் நான் ஏதோ வேண்டுமென்று மலையாளத்தை இகழ்வதாக நினைக்க வேண்டாம். அது பாஷை தெரியாத குற்றமே ஒழிய வேறல்ல. புகழ் பெற்ற ஆசிரியர் ஒருவர் ஒரு சமயம் ஒரு கூட்டத்தில் நாட்டிலுள்ள பல பாஷைகளையும் அவற்றின் இலக்கியங்களையும் பற்றிப் பேசும்போது, "ஆரஞ்சுப்பழத்திலுள்ள சுளைகள் வெவ்வேறாக இருக்கின்றன. ஆயினும் அவை ஒன்று சேர்ந்து ஒரே

ருசியாகவே இருக்கின்றன அல்லவா? அதுபோல் பாஷைகள் வேறு வேருக இருப்பினும் அவற்றின் பண்பாடு வேறு வேறு அல்லவே?'' என்று கூறினர். அவர் கூறிய உவமை எவ்வளவு பொருத்தமாக இருக்கிறது!

மலையாளத்தைப் புகழ்ந்து பேசிய அந்த அம்மாளும் கேலியாகச் சொல்லவில்லை. உண்மையாகத் தாம் நினைத்ததைத்தான் சொன்னர். அவர் மலையாளத்திலே பிறந்து வளர்ந்தவர். தம் மழலைப் பருவத்தில் கற்ற பாஷையில் அவருக்கு ஒரு தனி அபிமானம் இருப்பது நியாயந்தானே?

இப்போது நம் தமிழை எடுத்துக்கொள்வோம். ஆங்கிலேயர்கள், ஏன் நம் தேசத்தினர்கூடச் சிலர், "எல்லாப் பாஷைகளையும்விட உங்கள் தமிழ்ப் பாஷைதான் மிகவும் கடினமாக இருக்கிறது'' என்று நம்மிடம் சொல்வது உண்டல்லவா? அவர்கள் ஏன் அப்படிச் சொல்ல வேண்டும் என்பது நமக்கு விளங்கவில்லை. அவர்கள் கூறுவதுபோல் தமிழ் அவ்வளவு கடினமாக நமக்குத் தோன்றுகிறதா? அதற்கு மாருகத் தமிழிலுள்ள தனி நயமும் எளிமையும் அல்லவோ நமக்கு விசேஷமாகத் தோன்றுகின்றன?

நாம் பிறந்த நாட்டை நம் தாய்நாடு என்கிறோம். இரண்டு எழுத்துக்கள் கூட்டிப் பேசும் திறமை ஏற்பட்டவுடன் நாம் கற்கும் மொழியைத் தாய்மொழி என்று அழைக்கிறோம். அதுதான் உயிர் உள்ள அளவும் நம்முடையது. பிற மொழிகளை நாம் எவ்வளவு கற்ருலும் அவை நம்முடையன ஆகா. நம் கருத்துக்கும் கற்பனைக்கும் ஏற்ற மொழி நம் தாய்மொழியே என்பதை அனைவரும் ஒப்புக்கொள்வார்கள். ஆகவே நம் சொந்தத் தாயைப் போற்றுவதைப்போல் நம் தாய்நாட்டையும் தாய்மொழியையும் நாம் போற்றக் கடமைப்பட்டிருக்கிறோம். நம் உள்ளத்தில் எழும்

அழகிய கற்பனைகளையும் ஆழ்ந்த எண்ணங்களையும் நாம் பேசும் மொழியிற்போல், என்னதான் கற்றிருந்தாலும் பிற மொழிகளில் அவ்வளவு எளிதாகச் சொல்ல முடியுமா? உண்மையில், நம் சொந்தப் பாஷையில் காணாத இனிமையை வேறு பாஷையில் நாம் காண்பது என்பது எவ்வாறு சாத்தியமாகும்?

அவ்விதம் மற்ற மொழிகளில் காணாத இனிமையைப் பாரதியார் தம் தாய்மொழியிலே கண்டார் என்று தெரிகின்றது. அந்த இனிமையைக் கண்டதுடன் அதை ஒரு கவியாகவும் அவர் பாடிவிட்டார்.

"யாம் அறிந்த மொழிகளிலே தமிழ்மொழிபோல் இனிதாவது எங்கும் காணோம்" என்கிறார். அச் சொற்களில்தான் எவ்வளவு பெருமையும் நம்பிக்கையும் தொனிக்கின்றன! ஏதோ, 'காக்கைக்குத் தன் குஞ்சு பொன்குஞ்சு' என்பதுபோல், 'என்னுடையது எனக்கு அருமைதானே!' என்ற ரீதியில் அவர் பாடவில்லை. 'எங்கள் தமிழிலுள்ள எளிமையையும் இனிமையையும் மற்றப் பாஷைகளிலே காட்டுங்கள், பார்ப்போம்' என்று வீறுப்புடன் கேட்பதுபோல் அல்லவா இருக்கிறது அவர் கூறுவது? அவர் தமிழ் மட்டும் கற்றவராக இருந்தால் ஏதோ மிதமிஞ்சிய ஆர்வத்தினல் அவ்விதம் பேசுகிறார் என்று விட்டுவிடலாம். ஆனல் அவர் தமிழ்மட்டும் கற்றவர் அல்ல. வேறு பாஷைகளையும் நன்கு கற்றவர். அதனுல்தான், 'யாம் அறிந்த மொழிகளிலே' என்று தைரியமாகச் சொல்லுகிறார்.

நம் தாய்மொழியின் அருமையை உணர்ந்து அநுபவிக்க வேண்டும் என்றால் நாம் அதை மட்டும் கற்பது போதாது. இரண்டொரு பிற மொழிகளையும் நன்கு பயின்றிருக்க வேண்டும். அப்போதுதான் அவைகளுடன் ஒப்பிட்டுப் பார்த்து நம் பாஷையின் தனிச்சிறப்பை அறிவது சாத்தியமாகும். 'இங்கிலாந்

திலேயே உள்ளவர்களுக்கு இங்கிலாந்தைப்பற்றி என்ன தெரியும்?' என்று ஆங்கிலேயர்கள் பெருமையடித்துக் கொள்வார்களாம். அதுபோல் தமிழ் மட்டும் கற்றவர்களுக்குத் தமிழைப்பற்றி என்ன தெரியும் என்றுதான் நாமும் சொல்ல வேண்டும். சொந்த நாட்டை விட்டுச் சில காலம் வெளிநாடு சென்றிருந்தால் அப்போது நமக்கு என்றும் இல்லாத ஆர்வமும் பாசமும் நம் நாட்டின்மீது பிறக்கின்றன அல்லவா? பாஷை விஷயத்திலும் இது பொருந்தும்.

இப்போது, 'தமிழ் மொழியிலுள்ள இனிமை, மற்ற மொழிகளில் இல்லை' என்று சொல்லும்படி பாரதியார் அதில் கண்ட இனிமை என்ன? அதற்குத் தமிழ் என்று ஏன் பெயர் வந்தது?' என்று பார்ப்போம்.

'அமுதினும் இனிய தமிழ்'; அமுதத்தைக் காட்டிலும் இனிமையானது என்ற காரணத்தினுல் அதற்கு அந்தப் பெயர் வாய்த்தது என்று கொள்ளலாம். சிலர் தெற்கே வழங்கிய மொழியாகையால் 'தென்மொழி' என்றது பிறகு 'தமிழ்' என்று ஆயிற்று என்றும், வேறு சிலர் 'தனிமொழி' என்றும், மற்றும் சிலர் 'தேன்மொழி' என்றும் இப்படிப் பலவிதமாகச் சொல்வதும் உண்டு. ஒவ்வொரு பாஷைக்கும் அதற்கு உரிய குணங்களும் சிறப்புக்களும் இருக்கின்றன என்பது ஆராய்ந்து பார்த்தால் தெரியவரும். உருக்கம், எளிமை, இனிமை இவ்வகைக் குணங்களே தமிழின் பிரத்தியேகமான குணங்கள் என்று கூறலாம். வடமொழியை எடுத்துக்கொண்டால் இதற்கு முற்றும் மாறுன இயல்பே அதனுடையது என்பது உடனே விளங்கும். உருக்கம், இனிமை இவைகளுக்குப் பதில் கம்பீரமும் மேன்மையுமே அதற்கு இயல்பாக அமைந்துள்ள குணங்களாகத் தோன்றுகின்றன. என்ன தான் எளிய உடை அணிந்திருந்தாலும் ஒரு பிரபுவின்

முக விலாசமும் பேச்சும் எப்படி உயர்வாகவே விளங்குமோ அவ்விதமே எவ்வளவு சாதாரண விஷய மாக இருந்தாலும் சம்ஸ்கிருதத்தின் உயர்ந்த தோரணை யானது அந்த விஷயத்தை மேன்மையாக்கிவிடும்.

இந்தச் சந்தர்ப்பத்தில் தமிழ், சம்ஸ்கிருதம் இவ்வி ரண்டின் குணங்களையும்பற்றி என் தகப்பனர் எப்போ தும் கூறுவது எனக்கு ஞாபகம் வருகிறது. "பக்தியினல் உள்ளம் கசிந்து உருகும் பாடல்கள் தமிழில்தான் இருக் கின்றன. சம்ஸ்கிருதத்திலோ பக்தர்கள் பகவானை வேண்டிக்கொள்ளும்போது அதிகாரம் செய்வதுபோல் அல்லவா இருக்கிறது?" என்று ஒரே அடியாகக் கூறி விடுவார். அவர் கூறியதில் உண்மை இல்லையென்று யார் சொல்ல முடியும்?

இனி ஆங்கிலத்தின் பண்பு எத்தகையது என்று பார்ப்போம். அது தமிழ், வடமொழி இவ்விரண்டையும் விட வேறு விதமானது. உருக்கமோ இனிமையோ கம்பீரமோ போன்ற குணங்களைக் காட்டிலும் அதில் நயமும் லாகவமுமே அதிகமாக அமைந்திருக்கின்றன. இங்கிதமான பேச்சினல் பிறரைத் தன் வசமாக்கும் திறமை ஆங்கிலத்துக்கு விசேஷமாக உண்டு என்று கூறலாம். சொற்களுக்கு அடங்காத நுட்பமான உணர்ச் சிகளையும் மிக லேசான கருத்துக்களையுங்கூட விரிவாக வும் தெளிவாகவும் எடுத்து உரைப்பதில் ஆங்கிலத் துக்கு நிகராக வேறு எந்த மொழியையும் கூற முடியாது. உலகில் உள்ள மொழிகள் யாவற்றையும் விட ஆங்கிலத்தில்தான் அதிகச் சொற்கள் இருக்கின் றன என்று கணக்கிட்டிருக்கிறார்கள். அதனல்தான் அந்தப் பாஷையில் நல்ல தேர்ச்சி மட்டும் இருந்துவிட் டால் மனத்தில் தோன்றியதையெல்லாம் அழகாக எடுத் துரைக்க இயலுகின்றது போலும்!

பாரதியார் தமிழ்மொழியின் இனிமையையே முக்கியமாகக் கூறினர் அல்லவா?

அவர் தாமே அதைப் பெரிதும் உணர்ந்து அநுப வித்திராவிடில் அவ்வாறு கூறுவாரா? சொல்லுக்கும் பொருளுக்கும் சம்பந்தம் இருக்க வேண்டும் என்ற நியதியை யாவரும் அறிவோம். ஆனால் இனிமை உணர்ச்சியின் வசமாகி அந்த நியதியை அறவே மறந்து சில சமயம் அவர் விசித்திரமான சொற்களையே உப யோகப்படுத்துகிறார்.

"கண்ணம்மா" என்ற பாட்டை எடுத்துக்கொள் வோம்: "பேசும் பொற் சித்திரமே!" என்று கண்ணம் மாவை அழைக்கிறார். அது நமக்கு எப்படிப் படுகிறது? "பேசும் பொற் பதுமையே" என்று கூறினாலாவது சற்றுப் பொருத்தமாக இருக்கும்; அதை விட்டு, "பேசும் பொற் சித்திரமே!" என்று அழைப்பதில் என்ன அர்த்தம் இருக்கிறது என்று தோன்றுகிறது அல்லவா? ஆனால் அவர் ஆசையுடன் அவ்வாறு அழைப் பது நம் காதுகளுக்கு எவ்வளவு இன்பத்தைத் தருகி றது! "பேசும் பொற் பதுமையே!" என்பதில் அவ்வளவு இனிமை தோன்றுமா? அப்புறம், "என் முன்னே ஆடி வரும் தேனே!" என்கிறார். இது இன்னும் விநோதமாக இருக்கிறது. இதை மொழி பெயர்த்தால் எப்படி இருக்கும்? ஆனால் கண்ணம் மாவை ஆடி வரும் தேனாகக் கற்பனை செய்வதில் அவருக்குத் தனி இன்பம் ஏற்படாமற் போனால் அவ் வாறு கூற முடியுமா?

உளியைக் கையில் கொள்ளும் முன்னமே பாறை யில் சிலையைப் பெயர்த்து எடுத்துவிடுமாம் சிற்பியின் கண்கள். கவியாகிய சிற்பியும் சொற்களில் செய்யுள் வடிவத்தையே காண்கிறான். அதுபோல் இப்போது பாரதியார் தேனையே கண்ணம்மாவின் வடிவாகக் கண்டு அது தன் முன்னே ஆடி வருவதாகக் கற்பனை செய்கிறார் என்று வைத்துக்கொள்ளலாம் அல்லவா? கவிதை உலகில் சஞ்சரிப்பவர்களுக்கு உணர்ச்சிதான் கண். கவி

வெட்ட வெளிக்கு உருவமும் பெயரும் அளித்துவிடுகிறான் என்கிறார் ஷேக்ஸ்பியர் மகாகவி.

தமிழின் இனிமையைத் தெவிட்டாமல் பருகிய பாரதியார் மேலும் என்ன சொல்லுகிறார்? "தேமதுரத் தமிழோசை உலகமெலாம் பரவும்வகை செய்தல் வேண்டும்" என்கிறார். அதுமட்டும் அல்ல; "இறவாத புகழுடைய புதுநூல்கள் தமிழ்மொழியில் இயற்றல் வேண்டும்" என்று சொல்கிறார். என்ன பேராசை பாருங்கள்!

"தேமதுரத் தமிழ்" என்று மீண்டும் தமிழின் இனிமையையேதான் குறிப்பிடுகிறார். அந்தத் தேன் போன்ற மதுரமான மொழி நம்முடையது. அதைப் பற்றிப் பாரதியார் கொண்ட இன்பமும் பெருமையும் நாமும் கொள்ளவேண்டும். அப்போதுதான் அவர் விரும்பியபடி இறவாத புகழுடைய புது நூல்கள் தமிழ் மொழியில் இயற்றுதல் சாத்தியமாகும்.

ஆகவே நமக்குக் கிடைத்த அருஞ் செல்வமான இவ்வின்பத் தமிழை மேன்மேலும் போற்றி வளர்ப்பது நமது கடமை அல்லவா?

# 7

# இரவலும் இலக்கியமும்

சில தினங்களுக்கு முன் ரேடியோவில் இரவல் வாங்குவது என்னும் விஷயத்தைப்பற்றி ஒரு பெண்மணி பேசினுள். பேச்சைக் கேட்டுக்கொண் டிருக்கும்போது என் மனதும் மெதுவாக அவ்விஷயத்தைப்பற்றிச் சிந்திக்கத் தொடங்கியது.

சாதாரணமாக இரவல் வாங்குவது என்ருல் உடனே பெண்கள் நகைகள் இரவல் வாங்குவதைத் தானே நினைத்துக்கொள்ளுகிருேம்? இரவல் வாங்குவது அந்த ஒரு விஷயத்தில் மட்டுமா? இன்னும் எவ்வளவு விஷயங்களில் காணப்படுகிறது! பெண்கள் நகைகள் இரவல் வாங்குவதை ஆண்கள் பழிக்கிருர்கள். ஆனல் அத்தகைய சபலம் அவர்களுக்கு மட்டும் இல்லையா? ஏதோ அந்தக் குணம் தம்மிடம் இல்லாததுபோல், "இரவல் வாங்கியாவது நகைகள் அணிய வேண்டுமா? என்ன பைத்தியக்காரத்தனம்!" என்று இகழுகிருர்கள்.

பெண்களிடையே உண்மையில் இது ஒரு தீராப் பழக்கந்தான். நகைகள்மீதுள்ள மோகம், என்னதான் மனத்தை அடக்கினுலும் அவர்களை இரவல் வாங்கும் சபலத்துக்கு உள்ளாக்கிவிடுகிறது. ஒரு கல்யாணம் அல்லது கல்யாணத்துக்காகப் பெண்ணைப் பார்க்க வருகிருர்கள் என்று வைத்துக்கொள்வோம். அப்போது தன்னிடம் உள்ள நகைகள் போதும் என்று எந்தத் தாய் பேசாமல் இருக்கிருள்? அண்டை அயலிலிருந்து இரவல் வாங்கியாவது பெண்ணுக்கு அணிந்து அழகுபார்த்தால்தானே அவள் மனம் நிம்மதி பெறு

கிறது? நகையைத் திருப்பிக் கொடுக்கும்வரையில் ஜாக்கிரதையாகப் பாதுகாக்க வேண்டிய தொல்லையைக் கூட அவள் பொருட்படுத்துவதில்லை. துரதிருஷ்ட வசமாக நகை காணுமல் போய்விட்டால் அப்போது நிலைமை என்னவாகும்? நகை கெட்டுப்போனதுடன் வீண் பழிக்கும் ஆளாக வேண்டி வரும் அல்லவா?

இரவல் வாங்கிய நகை காணுமல்போய் அதனுல் தன் வாழ்க்கையே வீணுகிய ஒரு பெண்மணியின் கதையை, கை மாபஸாண்ட் (Guy Maupassant) என்னும் பிரபலப் பிரெஞ்சுச் சிறுகதை ஆசிரியர் வெகு உருக்கமாகச் சித்திரித்திருக்கிருர்.

சாதாரணக் குடும்பத்தைச் சேர்ந்த ஒரு பெண்ணுக்கு ஒரு பெரிய விருந்துக்கு அழைப்புக் கடிதம் வந்தது. அவ்வளவு பெரிய இடத்துக்குத் தக்கபடி அலங்கரித்துச் செல்ல வேண்டும் என்று எண்ணி அவள் தன் சிநேகிதியிடமிருந்து ஒரு வைர மாலையை இரவல் வாங்கி அணிந்துகொண்டு சென்றுள். ஆடல் பாடலுடன் விருந்து முடிந்து வீட்டுக்குத் திரும்பும்போது அணிந்திருந்த வைரமாலையைக் காணவில்லை. எங்கே தேடிப் பார்த்தும் கிடைக்கவில்லை. உண்மையைச் சொன்னுல் சிநேகிதி நம்ப வேண்டுமே என்று பயந்து அதைப்போல் வேறெரு வைரமாலை செய்து சிநேகிதியிடம் கொடுத்துவிட்டாள். அதன் கிரயத்தைச் சிறுகச் சிறுகக் கொடுத்துவிடுவதாகக் கடைக்காரனிடம் ஏற்றுக்கொண்டாள். ஆனுல் அதற்காக அவள் தன் சௌக்கியங்களைக் குறைத்து வீட்டில் தானே சகல வேலைகளையும் செய்யும்படி ஆயிற்று. அதன் பயனுக காலடைவில் அவள் அழகு, இளமை எல்லாம் அழிந்து போய்விட்டன. இப்படிப் பத்து வருஷ காலம் சென்ற பிறகுதான் அவள் மீண்டும் தன் சிநேகிதியைச் சந்திக்க நேர்ந்தது. தன் நிலைமையைக் கண்டு பரிவுடன் விசாரித்த அவளிடம் உண்மையைக் கூறினுள்.

அதைக் கேட்ட சிநேகிதி, "அப்படியா? அடி பாவி! எனக்கு முன்பே தெரியாது போயிற்றே. என் வைர மாலையை நிஜ வைரம் என்று நம்பி, நீ அசல் வைரத்தில் செய்து கொடுத்துவிட்டாயே!" என்று பரிதபித்தாள்.

பாவம், உண்மை இப்போது தெரிந்து என்ன பயன்? வீணுகப் போன வாழ்க்கையின் ஒரு பெரும் பகுதியை அவள் மீண்டும் பெற முடியுமா? வீண் பெருமைக்கு ஆசைப்பட்டு அவள் தன் அழகு, இளமை, சந்தோஷம் யாவற்றையும் இழந்துவிட்டாள்!

மனத்தை உருக்கும் இந்தக் கதை, ஆசிரியர் தம் திறமையினுல் வாழ்க்கையினின்றும் சித்திரிக்கும் சோக சம்பவங்களுள் ஒன்று. படித்தவுடன் நாம் என்றும் மறக்க முடியாதபடி நம் உள்ளத்தில் சென்று பதிந்து விடுகிறது.

புத்தகம் இரவல் வாங்கிப் படிக்கும் பழக்கத்தைப் பற்றித்தான் யாவரும் நன்கு அறிவோம். நூற்றுக்குத் தொண்ணூறு பேர்களிடம் இந்தப் பழக்கம் வெகு சகஜமாகக் காணப்படுகிறது. ஏனெனில் தமக்கென்று புத்தகங்கள் விலைகொடுத்து வாங்குவது என்பது எல்லோருக்கும் சாத்தியமா? அது சிலருக்கே முடியும். ஆகவே வேறு வழி இல்லாமல் புத்தகங்களோ பத்திரிகைகளோ இரவல் வாங்கித்தான் படிக்க வேண்டியதாகிறது. நகை இரவல் வாங்குவதுபோல் புத்தகம் இரவல் வாங்குவதில் நாம் வெட்கம், தயக்கம் ஒன்றும் கொள்வதில்லை. புத்தகந்தானே என்று சங்கோசமில்லாமல் கேட்கிருேம். புத்தகத்தின் சொந்தக்காரர்களும் கேட்பது புத்தகமே ஆகையால் எப்படிக் கொடுக்காமல் இருப்பது என்று அஞ்சுகிருர்கள். ஆனுல் நகைகள் விஷயத்தில் உள்ள பொறுப்பும் சிரத்தையும் இந்தப் புத்தகங்கள் விஷயத்திலும் இருக்கவேண்டும் அல்லவா? அதுதான் இல்லை.

புத்தகத்தைத் திருப்பிக் கொடுக்கும் நினைவே சிலருக்கு இருப்பதில்லை. சொந்தக்காரர்கள் ஞாபகமாகக் கேட்காவிட்டால் புத்தகம் அவர்களிடமே செரித்துப் போய்விடும்.

"புஸ்தகம் வனிதா வித்தம் பரஹஸ்தகதம் கதம்" என்ற சம்ஸ்கிருதப் பழமொழி கேட்டிருக்கிறோம் அல்லவா? அது இவர்கள் விஷயத்தில் நூற்றுக்கு நூறு உண்மையாகிவிடுகிறது. சிலர் தம் சொந்தப் புத்தகத்தைப் போல் வெகு சுவாதீனமாகப் பிறருக்கு இரவல் கொடுப்பார்கள். அது பிறகு கைக்குக் கை மாறி, முடிவில் முற்றும் உருக்குலைந்து திரும்பி வரும். ஆயினும் புத்தகத்தில் பற்றுள்ளவர்கள் கொடுப்பதற்கு யோசித்தால் பிறர் குற்றம்கூறுமலும் இருக்கமாட்டார்கள்.

ஒரு பெரிய மனிதர் இப்படித்தான் புத்தகங்களில் விசேஷப் பற்றுதல் உள்ளவர். நூற்றுக்கணக்கான அரிய புத்தகங்களை வாங்கித் தாம் படித்தவுடன் அழகாக அலமாரியில் அடுக்கி வைத்துவிடுவார். யாராவது ஒரு புத்தகம் படிப்பதற்குக் கேட்டுவிட்டால் அவருக்கு உடனே பயம் வந்துவிடும்.

"எப்போது திருப்பிக் கொடுப்பீர்கள்? உங்களுக்குப் படிப்பதற்கு எவ்வளவு நாளாகும்?" என்றெல்லாம் கேட்பார்.

"இங்கேயே உட்கார்ந்து வேண்டுமானுல் படித்துவிடுங்களேன்" என்றுகூடச் சொல்லிவிடுவார். தம் புத்தகங்கள்மீது அவ்வளவு பாசம் அவருக்கு. ஆனுல் கேட்பவர்கள் அதை உணர முடியுமா?

சிலர் இரவல் வாங்கிய புத்தகங்களை, நாளாகிவிட்டால், தம்முடையதாகவே பாவித்துக்கொண்டுவிடுவது வழக்கம். அப்படிச் சேர்ந்த புத்தகங்களை வெகு ஜாக்கிரதையாகத் தங்கள் அலமாரியில் அடுக்கி வைத்துவிடுவார்கள்.

ஏ.ஜி. கார்டினர் என்ற ஆங்கில ஆசிரியர் இதன் சம்பந்தமாக ஒருகட்டுரையில் வேடிக்கையாக எழுதுகிறார்:

"ஒரு பெரிய மனிதர் நூற்றுக் கணக்கான அருமையானபுத்தகங்களைச் சேகரித்து வைத்திருந்தார். அவர் இறந்தபின் அவற்றை விற்றபோது அநேகம் புத்தகங்களில் பல வாசகசாலைகளின் பேர்களே காணப்பட்டனவாம்! பாவம்! அவைகளைத் திருப்பிக் கொடுப்பதற்கு அவருக்குச் சரியான சமயமே கிடைக்கவில்லை போலும்!" என்கிறார் ஆசிரியர் கிண்டலாக.

ஒரு கனவான் இறக்கும்போது தம்முடைய புகழ் பெற்ற 'லைப்ரரி'யைப் பொதுமக்களின் உபயோகத்துக்காகக் கொடுத்துவிட்டுச் சென்றாராம். ஆனால் அதில் உள்ள புத்தகங்கள் ஒன்றிலாவது அவர் பெயர் இல்லை; எல்லாம் இரவல் வாங்கிய புத்தகங்களாகவே இருந்தனவாம்! பாருங்கள் வேடிக்கையை!

இந்த இரவல் வாங்கும் குணம் இலக்கிய உலகிலும் வெகு சகஜமாகவே தென்படுகின்றது. எழுத்தாளர்களிடம் இதை ஒரு தவறாகவே நாம் மதிப்பதில்லை. சிலர் வரிக்கு வரி பிறர் கருத்துக்களை மேற்கோளாகத் தம் கட்டுரையில் உபயோகப்படுத்துகிறார்கள். நாமும் ரசித்துப் படிக்கிறோம் அல்லவா?

எழுத்தாளர்களில் பல வகையினர் இருக்கிறார்கள். தம் சொந்தக் கற்பனைகளையும் கருத்துக்களையுமே வைத்துக்கட்டுரைகளோ கதைகளோ எழுதுபவர் சிலர். பிறருடைய சிறந்த கற்பனை அல்லது கருத்தை ஒட்டி அதில் தம் மனோதர்மத்தின் சக்தி முழுவதையும் காட்டுபவர் வேறு சிலர். மற்றும் சிலர் பிறர் எழுதியவற்றை உயர்ந்த முறையில் விமர்சனம் செய்வார்கள். எல்லாம் இலக்கியத்தைச் சேர்ந்தவையே.

முற்றும் சொந்தமாக எழுதுவது விசேஷந்தான். எனினும் அப்படி எழுதுவது மிக உயர்தரமாக இருக்க

வேண்டும். இல்லாவிட்டால் அதில் ஒன்றும் பெருமை இல்லை. நம்முடையது என்பதில் உள்ள பாகமானது நம் பகுத்தறிவை அறவே ஒழித்துவிடுகிறது. நாம் எழுதுவதெல்லாம் இலக்கியம் என்று நினைத்துக்கொள்ளுகிறோம். இல்லாவிட்டால் குப்பைக் கூடையில் எறிய வேண்டியவற்றை யெல்லாம் பொதுமக்கள்தாம் பிணைப்பட்டவர்கள் என்று அவர்கள் தலையிலே சுமத்துவோமா? (இப்போது நான் எழுதுவதும் அப்படித்தானோ என்று எனக்கு அச்சம் உண்டாகிறது.)

இலக்கியத்தில் முற்றும் சொந்தமாகத்தான் எழுத வேண்டும் என்ற நிபந்தனை இல்லை. அப்படிப் பார்த்தால் உலக மகாகவிகளைக்கூட முற்றும் சொந்தமாக எழுதினவர்கள் என்று கூற முடியாது. ஏன்? காளிதாசன், ஷேக்ஸ்பியர், கம்பன் இவர்களைத்தான் எடுத்துக்கொள்வோமே! இவர்களைவிடச் சிறந்த கவிகள் என்று வேறு எவர்களைச் சொல்ல முடியும்? இரவல் வாங்குவதைத் தங்கள் பெருமைக்குப் பங்கமாக அவர்கள் கருதவே இல்லை. ஒப்பற்ற சாகுந்தல நாடகம் காளிதாசன் இயற்றியதுதான். ஆனால், கதை அவனுடையதல்ல. மகா பாரதத்திலிருந்து இரவல் வாங்கியது. அந்தப் பழைய கதையை வைத்துக் காளிதாசன் ஓர் அற்புத நாடகத்தைச் சிருஷ்டித்துவிட்டான். அந்த நாடகத்தை அல்லவா உலகம் கொண்டாடுகிறது!

ஷேக்ஸ்பியர் நாடகக் கதைகளும் அவ்வாறு இரவல் வாங்கியவையே. ஆனால் கதைகள் ஷேக்ஸ்பியரின் சொந்தமா இரவலா என்பதைப்பற்றி யாரும் கவலைப்படுவதில்லை. கம்பனும் கதையைப்பற்றி யோசிக்காமல் ராமாயணக் கதையையே எடுத்துக்கொண்டு தன் கவி வன்மை முழுவதையும் அதில் கொட்டிவிட்டான். அதனால் அவர்கள் மனோதர்மத்துக்கும் கவிதா சக்திக்கும் என்ன குறை ஏற்பட்டது? வடமொழியில் உள்ள கவிகள் யாவருமே புராணக் கதைகளையே வைத்துக்

கொண்டு நாடகமும் காவியமும் இயற்றியிருக்கிறார்கள்.

புராதனக்கோவில் சுவர்களில் அற்புதமான சித்திரங்கள் தீட்டப்பட்டிருக்கும் அல்லவா? அந்தச் சித்திரங்களை வரைந்த ஓவியக்காரர்களைத்தானே நாம் கொண்டாடுகிறோம்? சுவர்கள் கோவிலினுடையவை என்பதனால் அந்தப் புகழ் அவர்களைச் சேராமல் இருந்துவிடுகிறதா? ஆகவே சித்திரம் முக்கியமே ஒழியச்சுவர் முக்கியம் அல்ல என்பது சொல்லாமலே விளங்குகின்றது. தங்கள் கற்பனை சக்தியைக்கொண்டு கவிகள் தாம் இரவல் வாங்கியவற்றை மீண்டும் புதிதாக அழகுபெறச் சிருஷ்டித்து விடுகிறார்கள்.

உலகில் எல்லா விஷயத்திலும் நன்மை, தீமை இரண்டும் கலந்திருப்பது இயற்கை. அது இந்த இரவல் வாங்குவதிலும் உண்மையாக இருக்கிறது. கவிகளும் பேராசிரியர்களும் மற்றவர்களைப்போல் இரவல் வாங்கினாலும் தம் திறமையினால் அதை மேன்மையாக்கி விடுகிறார்கள் அல்லவா?

8

# நாகரிகமா?

நம்மில் பெரும்பாலோருக்கு எதைப்பற்றிச் சந்தேகம் இருந்தாலும் ஒரே ஒரு விஷயத்தைப்பற்றி மட்டும் சந்தேகம் அடியோடு இல்லை. அது என்ன என்றால், அதுதான் நாம் இப்போது அடைந்து வரும் நாகரிகம். அதைப்பற்றி அவர்களுக்குச் சந்தேகம் இல்லாததுமட்டும் அல்ல; உலகில் நாகரிகத்துக்குப்பேர் போன இதர நாடுகளுக்குச் சரியாக நாமும் முன்னேற்றம் அடைந்துவருகிறோம் என்பதில் அவர்களுக்குப் பூரண நம்பிக்கையுங்கூட என்று சொல்லலாம். ஆனால் இதற்கு முன் தங்களுக்கு நாகரிகமே இல்லையா? இருந்தால் அது எவ்விதமானது? அதன் தன்மை என்ன? ஆகிய இவ்விஷயங்களைப் பற்றி அவர்கள் சிந்திப்பதே இல்லை.

இப்போது ஒரே நாகரிகம் - அதாவது மேல் நாட்டு நாகரிகந்தான்-உலகம் எங்கும் பரவிக்கொண்டு வருகிறது. இது எல்லோரும் அறிந்ததே. ஆயினும் அது நமக்கு அவசியமா? நாம் நடத்தி வரும் வாழ்க்கைக்கு ஏற்றதுதானா? இவைபோன்ற விஷயங்களைப் பற்றி ஒருவரும் சிந்தித்துப் பார்ப்பதில்லை. ஏன்? மேனாட்டு நாகரிகத்தினால் விளையும் நன்மைகளும் சௌகரியங்களுந்தான் அதற்குக் காரணம். அவற்றைக் கண்கூடாகக் காணும்போது, அதைப்பற்றி உண்மையில் யார்தான் குறைகூற முடியும்? பழைய நிலைமையிலேயே நாடு இன்னும் இருந்தால் இப்போதுள்ள கார், ரேடியோ, ஸினிமா போன்ற போகவாழ்வுக்குரிய சிறந்த சாதனங்களை நாம் அடைந்து அநுபவிக்க

இயலுமா? விஞ்ஞான அறிவின் பயனாக இயற்கையின் அரிய சக்திகளை வென்று அவைகளைத் தமக்குப் பணி செய்யும்படி செய்யும் ஆற்றலைப் பெற்றதனால் இந்தப் பரந்த உலகமே சிறுத்துக் குறுகியதாகிவிட்டது அல்லவா? பூமியின் ஒரு கோடியினின்றும் மற்றொரு கோடிக்குச் செய்தி போக வேண்டும் என்றால் ஒரு நொடியில் போய்விடுகிறது. ஒரு பாகத்தினின்றும் மற்றொரு பாகத்துக்குச் செல்லவேண்டும் என்றால் சில மணி நேரந்தான் தேவை. ஆகாய விமானத்தில் பறந்து அங்கே போய்ச் சேர்ந்துவிடுகிறோம். இவையெல்லாம் மனிதன் கனவிலும் நினையாத அற்புதங்கள் அல்லவா? தற்காலம் இத்தகைய நாகரிகத்தின் உச்ச நிலையை அடைந்திருப்பது அமெரிக்கா; ஐரோப்பிய நாகரிகங்கூட அதற்குச் சற்றுக் குறைந்ததுதான்.

பெர்ட்ரண்டு ரஸ்ஸல் (Bertrand Russel) என்னும் ஆங்கிலப் பேரறிஞர் அமெரிக்காவைப்பற்றிக் கூறும் போது, "இறந்து விண்ணுலகு ஏகிய ஜார்ஜ் வாஷிங் டன் இப்போது மீண்டும் மண்ணுலகு வந்தால் தாம் உருவாக்கிய நாட்டையே புரிந்துகொள்ள முடியாமல் விழிப்பார் என்பதில் சந்தேகம் இல்லை" என்கிறார். சீனா தேசமே மற்ற எல்லாத் தேசங்களையும்விட அவர் மனத் துக்குப் பிடித்ததாக இருக்குமாம். ஏனெனில் அங்கே தான், "வாழ்க்கை, வாழ்க்கையில் ஆனந்தம் அடையும் வழி, சுதந்தரம் இவ்விஷயங்களில் இன்னும் நம்பிக்கை யுள்ளவர்கள் இருக்கிறார்கள்" என்று கூறுகிறார். தாங்கள் மேன்மேலும் முன்னேற்றம் அடைந்து வருவதில் தங்க ளுக்குள்ள சர்வ நிச்சயத்தையும், சென்ற நூறு வருஷங் களாகத் தேசத்தில் அப்போதைக்கு அப்போது ஏற்பட்டு வரும் மாறுதல்கள் தேசத்தின் நன்மைக்கே என்று தாங்கள் தீர்மானமாக நம்பியிருப்பதையும் அவர் பரிக சிப்பதோடு, "நூற்றைம்பது வருஷங்களுக்கு முன் நாம் இருந்த நிலைமையில் இன்னும் இருக்கும் சீனா தேசத் தைப் போய்ப் பார்த்துவிட்டுப் பிறகு உண்மையில் நாம்

முன்னேற்றந்தான் அடைந்து வருகிறோமா என்று யோசித்துப் பார்ப்பது மிகவும் நலம்" என்கிறார்.

கிறிஸ்து பிறப்பதற்கு ஐந்நூறு வருஷங்களுக்கு முன் இருந்த கன்ப்யூஷியஸ் (Confucius) என்ற ஞானியின் உபதேசங்களையே அடிப்படையாகக் கொண்டது சீனு தேசத்தின் நாகரிகம். மக்கள் வரவர முன்னேற்றம் அடைந்து வருவதாக நினைக்காமல், 'பழைய காலத்தில் நாட்டை ஆண்டவர்கள் சிறந்த அறிவாளிகள்; அவர்கள் காலத்தில்தான் ஜனங்கள் மிக்க சந்தோஷமாக இருந்தார்கள்' என்ற நம்பிக்கை உள்ளவர் கன்ப்யூஷியஸ்.

"இவ்வளவு காலமாக ஒரு நாகரிகம் அழிந்து போகாமல் அப்படியே இருக்க வேண்டுமானால் அது அரிய குணங்கள் உள்ளதாகத்தான் இருக்க வேண்டும். ஆயினும் கன்ப்யூஷியஸின் உபதேசத்தின் சாராம்சமெல்லாம் இதுதான். பதினெட்டாம் நூற்றாண்டில், பெரிய மனிதன் (Gentleman) என்று பழைய ரீதியில் நாம் கருதி வந்ததற்கு மேல் அதிகமாக ஒரு மனிதன் இருக்க வேண்டிய விதத்தைப்பற்றி அவர் கூறவில்லை" என்கிறார் ரஸ்ஸல்.

கன்ப்யூஷியஸ் கூறுவதைப் பார்ப்போம். "உண்மையான பெரிய மனிதன் என்றால் அவன் ஒருவருடனும் சச்சரவு செய்யமாட்டான். அவனிடம் போட்டியிடும் குணம் இருந்தாலும் அது ஏதேனும் பந்தயத்தில் சேர்ந்திருக்கும்போதுதான் வெளியாகும். அப்போதும் ஜயித்தாலும் தோற்றாலும் மிகவும் விநயத்தோடு அவன் நிஜமான பெரிய மனிதனாகவே நடந்துகொள்வான்" என்கிறார். இதுதான் கன்ப்யூஷியஸ் வகுக்கும் உயர்ந்த மனிதனின் லக்ஷணம்!

ஒழுக்கம், கடமை, இவைகளைப்பற்றி அவர் வெகுவாய் எடுத்துச் சொன்னாலும் இயற்கைக்கு விரோதமான விதிகளை ஒன்றும் அவர் கூறவில்லை. ட்யூக் ஆப் ஷீ (Duke of She) என்பவர் ஒரு சமயம் கன்ப்யூஷியஸிடம்,

"எங்கள் ஊரில் மிகவும் நேர்மைக் குணம் படைத்தவன் ஒருவன் இருக்கிறுன். அவன் தந்தை ஓர் ஆட்டைத் திருடியபோது மகன் தன் தந்தைக்கு விரோதமாகச் சாட்சி கூறினுன்" என்றுராம். அதற்குக் கன்ப்யூஷியஸ், "நேர்மைக்குணம் என்பது இது அல்ல. தந்தை மகன் குற்றத்தை மறைக்க வேண்டும்; மகன் தந்தையின் குற்றத்தை மறைக்க வேண்டும். இவ்வாறு பரஸ்பரம் நடப்பதில்தான் உண்மையான நேர்மைக் குணம் பிறக்கின்றது" என்று பதில் அளித்தாராம்.

கன்ப்யூஷியஸ் எல்லாவற்றிலும் மிதமாக இருப்பவர். நல்லொழுக்கத்திலும் மிதமாக இருப்பதையே போதித்தார். தீமைக்குப் பதில் நன்மை செய்ய வேண்டும் என்பதை அவர் ஒப்புக்கொள்ளவில்லை. "தீமை செய்பவனுக்குப் பதில் நன்மைதான் செய்யவேண்டும் என்ற கொள்கையைப்பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?" என்று கேட்டதற்கு, "அப்படியானுல் நன்மை செய்பவனுக்கு என்ன பதில் செய்வது? சாதாரணமாக அக்கிரமத்துக்குப் பதில் தண்டனையும், தீமைக்குப் பதில் தீமையும் செய்வதுதான் நல்லது" என்று பதில் சொல்லிவிட்டாராம்!

சீனுவில் எவ்வளவோ பெரியார்கள் இருந்திருக்கிறுர்கள். எனினும் கன்ப்யூஷியஸின் உபதேசங்கள்தாம் மக்களுக்கு ஏற்றவையாகத் தோன்றின. "சாஸ்திரம் ஒரு விதமாகவும், நடப்பது வேறு விதமாகவும் இருக்கும் வழக்கம் சீனுவில் இல்லை. மக்கள் சாஸ்திரத்தில் விதித்தபடியே முற்றும் நடக்காவிட்டாலும் அவ்வாறு நடப்பதற்கு உண்மையில் முயலவாவது முயல்கிறுர்கள். ஆனுல் இங்கே நாம் செய்வது என்ன? நம் வேத புத்தகத்தில் கூறியிருக்கும் எவ்வளவோ விஷயங்கள் நடைமுறைக்கு ஒவ்வாமல் மிக உயர்ந்தவையாக இருக்கின்றன. உண்மையில் நமக்கு இரண்டுவித ஒழுக்கங்களே இருக்கின்றன. ஒன்று ஏட்டிலும் மற்றென்று நடைமுறை

யிலும் இருக்கின்றன. சாத்விக முறையில் நமக்கு நம்பிக்கை இல்லை. தனி மனிதனோ தேசமோ கஷ்டங்களை எதிர்த்துப் போராடி வாழ்க்கையில் வெற்றி பெறவேண்டும் என்று நினைக்கிறோம். ஆனால் சீனமக்கள் இம்மாதிரி அநுசரிப்பதில்லை. சில சமயங்களில் சண்டை நியாயந்தான் என்று அவர்கள் ஒப்புக்கொண்டாலும் அம்மாதிரி சமயங்கள் அவர்களுக்கு மிகவும் அபூர்வம். ஆனால் நாம் இங்கே என்ன செய்கிறோம்? எந்தச் சமயமும் சண்டை சரியல்ல என்பது கொள்கை அளவில் இருக்கிறதே ஒழிய நடைமுறையில் இல்லை. சண்டைகள்தாம் அடிக்கடி நேருகின்றன. "சீனர்கள் எப்போதாவது சச்சரவு இடுவது உண்டு என்றாலும் மொத்தத்தில் அவர்கள் சச்சரவு இடும் குணமுள்ளவர்கள் அல்ல என்றே சொல்லவேண்டும். யுத்த அல்லது வியாபார வெற்றியை அவர்கள் பெரிதாக மதிப்பதில்லை. உயர்வாக அவர்கள் வியந்து போற்றுவது கல்வியறிவு; அத்துடன் அமரிக்கையையும் மரியாதையையுந்தான் அவர்கள் அதிகமாகப் பாராட்டுவார்கள். மேனாட்டுக் கல்வி பயின்ற இக்கால இளைஞர்கள் ஒருவேளை தம் முன்னோர்களின் படிப்பைப் பெரிதாக மதிக்காதிருக்கலாம்; ஆயினும் அவர்களிடமும் சாந்தம், பணிவு, மிதமான பழக்கம் முதலிய குணங்கள் இன்னும் அடியோடு அற்றுப்போகவில்லை. இன்னும் சில வருஷம் நம்முடன் பழகிய பிறகும் அக்குணங்கள் அவர்களிடம் நிலைத்திருக்குமோ என்பது சந்தேகந்தான்" என்று பெர்ட்ரண்ட் ரஸ்ஸல் சொல்லுகிறார்.

நமக்கும் சீனர்களுக்கும் உள்ள வித்தியாசத்தை ஒரே வார்த்தையில் சொல்வதென்றால் எப்படிச் சொல்வது? வாழ்க்கையில் இன்பமே சீனர்களின் நோக்கம். நாம் விரும்புவதோ சக்தி. இயற்கையையும் மனிதர்களையும் அடக்கி ஆளத்தான் நாம் விரும்புகிறோம். சீனர்களுக்கு மட்டும் ஏன் இம்மாதிரி ஆசைகள் இல்லை என்றால் அவர்கள் சோம்பலும் நல்ல குண

மூந்தான் காரணம். ஆயினும் அவர்களை முற்றும் சோம் பேறிகள் என்றும் சொல்லுவதற்கில்லை. ஜீவனத்துக் காக அவர்கள் நன்ருக உழைப்பவர்கள்தாம். அவர்களை வேலைக்கு வைத்துக்கொண் டிருப்பவர்களைக் கேட்டால், "அவர்கள் அசாதாரணமான உழைப்பாளிகள்" என்றே சொல்லுவார்கள். ஆனல் நம்மையும் அமெரிக்கர்களையும் போல், 'ஏதாவது வேலை செய்யாவிட்டால் வாழ்க்கை யில் சலிப்பு ஏற்பட்டுவிடும்' என்பதற்காக அவர்கள் வேலை செய்ய மாட்டார்கள். சௌகரியமான வாழ்க்கை நடத்தப் பணம் போதும். அதை விருத்திசெய்ய அவர் கள் வீண் சிரமப்பட மாட்டார்கள். எவ்வளவு வேண்டு மானுலும் உற்சாகமாகப் பொழுது போக்க அவர் களால் முடியும். நிச்சிந்தையாக ஸினிமா, டிராமா இவைகளுக்குப் போவது, அல்லது தேனீர் அருந்திய வண்ணம் உற்சாகமாகப் பேசிக்கொண் டிருப்பது, இல்லையென்ருல் பழங்காலத்துக் கலைத் திறமையை வியந்துகொண் டிருப்பது இப்படி அவர்கள் ஏதாவது சந்தோஷமாகப் பொழுது போக்கியவண்ணம் இருப் பார்கள். இத்தகைய வாழ்க்கை நம்மைப் போன்றவர் களுக்குக் கேவலம் உப்புச் சப்பில்லாத வாழ்க்கை யாகத் தோன்றிவிடும். 'வேலைக்குப் போகிறேன்' என்று பிறருக்குத் தீங்கையே செய்துகொண் டிருந் தாலும் தினம் வேலைக்குச் செல்லும் மனிதனைக் கண்டால்தான் நமக்கு மதிப்பு!

"பழக்க தோஷமோ என்னவோ? சீனுவைப்பற்றி நன்கு அறிந்துகொண்ட பிறகு, மொத்தத்தில் சோம் பல் ஒரு சிறந்த குணம் என்றே எனக்குப் படுகிறது. சுறுசுறுப்பாக இருப்பதனுல் நாம் சில விஷயங் களைச் சாதிக்கிறோம். இது வாஸ்தவமே. ஆயினும் அவற்ருல் கடைசியில் என்ன பயன் என்ற சந்தேகம் ஏற்படுகிறதல்லவா? கப்பல், ரேடியோ, டெலிபோன் முதலிய உயர்தர வாழ்க்கைக்குரிய சாதனங்களை உண்டுபண்ணுகிறோம்; ஆனல் அத்துடன் நூற்றுக்

கணக்கான ஜனங்களை ஒரே அடியாக அழிக்கும் வெடி குண்டு, விஷப் புகை, ஆகாய விமானம் முதலியவை களையும் உற்பத்தி செய்துவிடுகிறோம். எவ்விதமான குற்றங்களையும் கண்டுபிடிக்கும் திறமையுள்ள போலீஸ் படையை அமைத்திருக்கிறோம். ஆயினும் அதோடு அரசியல் துறையில் புதிய அபிப்பிராயங் களோடு யாரேனும் தோன்றிவிட்டால், உடனே அவர் களைப் பிடித்துச் சிறையில் அடைத்துவிடுகிறோம். சமீப காலம் வரையில் சீனாவில் மோட்டார் முதலியன செய்யவோ வெடிகுண்டு தயாரிக்கவோ திறமை போத வில்லை. மக்களுக்குப் போதிய கல்விப் பயிற்சி அளிக்கச் சக்தி இல்லாததுபோலவே பிற நாட்டு மக்களைக் கொல் வதற்கும் சக்தியற்றவர்களாக இருந்தனர். நம்போன்ற உயர்ந்த போலீஸ் படையும் அவர்களுக்கு இல்லை. ஆயி னும் மேல்நாடுகளோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது சீனாவில் எல்லோருமே சுதந்தரம் உள்ளவர்கள் என்று சொல்லலாம். நாடு முழுவதும் உள்ள வறுமையை நோக்கும்போது மக்கள் எல்லோ ரும் ஓரளவு சந்தோஷ வாழ்க்கை நடத்துகிறார்கள் என்பது நமக்கு ஆச்சரியத்தையே அளிக்கிறது அல்லவா? நம்மைப்போல் ஒழுக்கத்தைப்பற்றி அவ்வளவு உயர்ந்த எண்ணங்கள் அவர்களுக்கு இல்லை. ஆனால் அவர்கள் தங்கள் கொள்கைகளைக் கூடியமட்டும் நடைமுறையில் அநுசரிக்கிறார்கள். நாமோ உயர்ந்த ஒழுக்கமுறையை ஏற்படுத்திக்கொண்டு அதை அநுசரிக்க முடியாமல் கேவலம் வேஷம் போடுகிறவர்கள் ஆகிவிடுகிறோம். பெற்றோர்களிடம் மரியாதை, குழந்தைகளிடம் அன்பு, எளிய உறவினர்களிடம் தயவு, அனைவரிடமும் ஒரு விநயம் இக்குணங்கள் தாம் சீனாவில் முக்கியமானவை. இவற்றைப் பெரும்பாலான மக்கள் சுலபமாகப் பெற்றி ருக்கின்றனர். மிக உயர்ந்த கொள்கைகளை வைத்துக் கொண்டு அவற்றைப் பின்பற்ற முடியாமல் தவறிப் போவதைக்காட்டிலும் இது எவ்வளவோ மேலல்லவா?

நம்மைப்போல் அல்லாமல்,சீனர்கள் தங்கள் அபிப் பிராயங்களை மற்றவர்களுடன் பேசிச் சர்ச்சை செய்யத் தயாராக இருக்கிறார்கள். ஆனால் நமக்குள் எப்படி யெனில் அபிப்பிராயங்கள் விரைவில் கொள்கைகளாகி விடுகின்றன. ஒரு கட்சி எதிர்க்கட்சியை மிகவும் கெட்டதாகக் கருதுவதால் அதற்கு அணுவளவேனும் இணங்குவது பெரிய தவறாகத் தோன்றுகிறது. ஆகவே அபிப்பிராய பேதம் சண்டையாக முற்றி, போலீஸின் உதவியை நாடச்செய்கிறது. சீனாவில் ராணுவம் இருந் தாலும் அவர்கள் அதைக் கவனிப்பதில்லை. சாதாரண வழக்கில் மூன்றாம் மனிதரைக் கொண்டு சமாதானம் செய்துகொள்வார்கள். நான்கு பேர் சிரிப்பார்கள் என்ற எண்ணம் பெரிதாக இருப்பதால் இருதரத்தாரும் ராஜியாவதுதான் சரி என்பதே அவர்கள் கொள்கை.

சீனர்களிடம் ஒரே ஒரு குறைதான் உண்மை யானது. சண்டைக்கே வழி தேடும் பிரதேசங்களை எதிர்க்க அவர்களால் முடியவில்லை. உலகம் முழுவதும் சீனாவைப் போல் இருந்தால் எங்கும் சந்தோஷம் நிலவும் என்ப தில் தடை இல்லை. ஆனால் மற்ற நாடுகள் சண்டை இடுவனவாக இருக்கும்போது தாங்கள் தனி ராஜ்யமாக வாழவேண்டுமானால் சீனர்களும் நம்முடைய துர்க் குணங்களை ஓரளவு பின்பற்றித்தான் ஆகவேண்டும். ஆயினும் நம்மைப் பின்பற்றுவது அவர்களுக்கு நன் மையே பயக்கும் என்று மட்டும் நாம் பெருமை அடித் துக்கொள்ள வேண்டாம்.”

இவ்வாறு பழங்கொள்கைகளும் பழம் சம்பிரதா யங்களுமுள்ள பிற்போக்கான நிலைமையினின்று இன் னும் முன்னேற்றமடையாத சீனாவை பெர்ட்ராண்ட் ரஸ் ஸல் பாராட்டுவது நமக்கு வியப்பையே அளிக்கிறது. எந்த நாகரிகத்தை மேற்கொள்வதனால் பெரும்பான்மை யான மக்கள் வாழ்க்கையில் அதிக சந்தோஷத்தையும் அமைதியையும் பெறுவார்களோ அதுவே சிறந்த நாக ரிகம் அல்லவா?

௭

# எனது சிந்தனை

ஒரு நாள் கண்ணாடியின் முன் நின்று தலை வாரிக்கொண்டிருந்தேன். திடீரென்று ஏதோ மனத்தில் சுருக்கென்றது. காரணம், அடர்த்தியாக இருந்த கருமையின் இடையே பளீரென்று ஏதோ வெளுப்பாகத் தென்பட்டதுதான். கரிய மேகத்தினிடையே ஒளிரும் மின்னலைப்போல் அது ஒரு கணம் லேசாகத் தோன்றிப் பிறகு அடியோடு மறைந்துபோயிற்று. அம்மாதிரி இதற்கு முன்பு நான் ஒருபோதும் கண்டவள் அல்ல.

'அது என்னவாக இருக்கலாம்? ஒருவேளை...?' இந்தச் சந்தேகம் தோன்றவும், உடனே என் கைகள் தாம் ஈடுபட்டிருந்த வேலையினின்றும் தாமாகவே நின்றுவிட்டன. வேண்டாத ஒரு புதிய மாறுதலின் அறிகுறியாக இருக்குமோ என்ற உணர்ச்சி மின்சாரம்போல் என் சரீரம் முழுவதும் வியாபித்தது.

'அப்படி இராது; ஏதோ தவருன எண்ணம்' என்று மனத்தைச் சமாதானம் செய்துகொள்ள முயன்றேன். 'நம் கண் பார்வை என்ன அவ்வளவு கூர்மையா? ஒருபோதும் பிசகவே பிசகாதோ?' என்றுகூட அச் சமயம் எண்ணிவிட்டேன்.

'ஏதோ நூல் பறந்து வந்து மயிரில் சிக்கிக்கொண்டிருக்கும்; வேறொன்றும் இல்லை' என்று என்னைத் தைரியப்படுத்திக்கொண்டேன். ஆனலும் மனத்துக்கு என்னவோ நிம்மதி ஏற்படவில்லை. 'ஆகா! பகற் கனவு கண்டுகொண்டிருக்கிருயா?' என்று எனக்குள் ஏதோ ஒரு குரல் கூறிக்கொண்டே இருந்தது. ஆம், அதோ நன்று

கத் தெரிகிறது. இனி என்ன சந்தேகம்? பிடித்து இழுத்துப் பார்த்தேன். வேரூன்றி அழுத்தமாக, 'எனக்கு மட்டும் இங்கே இருக்க அதிகாரம் இல்லையா?' என்று இறுமாப்புடன் கேட்பதுபோல் இருந்தது.

'ஒரு சிறு நரை மயிர்; அதைக் கண்டு இவ்வளவு பயமா?' என்று நீங்கள் கேட்கலாம். உண்மையே. அது தட்டுக்கெட்டுத் தனியாக இருந்துவிட்டால் ஒன்றும் கவலையில்லை. அதைத் தலைகிளப்பவொட்டாமல் செய்து விடுவது வெகு சுலபந்தான். ஏனெனில் பிறர் கண்களில் படாவண்ணம் தடுத்து அதை மறைத்து வைப்பதற்குக் கணக்கற்ற கரிய மயிர்களின் பலம் நமக்கு இருக்கிறதல்லவா?

'அது வெளியில் தெரிந்துவிடப் போகிறதே! பிறர் பார்த்துவிடப் போகிறார்களே!' என்ற கவலை நமக்குப் பெரிதா? இல்லை. நம் யோசனையெல்லாம் கேவலம் அதன் தோற்றத்தைக் கண்டு அல்ல; அதனால் இனி வரப் போகும் விபரீதத்தைக் குறித்தே. இவ்வளவு நாட்களாக நாம் எதிர்காலத்தை மறந்திருந்தோம். அது நமக்கு இப்போது திடீரென்று நினைவுக்கு வருகிறது. உள்ளங்கையை மட்டும் பார்த்தோமேயன்றி நரம்பு ஓடியிருக்கும் புறங்கையை மறந்திருந்தோம். இப்போது நம் மனக்கண்முன் அது காட்சி அளிக்கிறது. வாழ்க்கை யாத்திரையில் நமக்கு இஷ்டம் இருந்தாலும் இல்லாவிட்டாலும் நம்மைக் கைப்பற்றிச் செல்லும் மூப்பின் வருகையை அறிவிக்கும் முதல் தூதன்போல் அது தோன்றுகிறது.

ஒரு சிறு நரைமயிர்தான். ஆனால் காலக்கிரமத்தில் இதைப்போன்ற கணக்கில் அடங்காத வெண்மயிர்கள் தோன்றி ஒன்று சேர்ந்து நிலைமையை அடியோடு மாற்றி விடுமே என்ற எண்ணம் எழும்போதுதான் இந்தச் சிறு நரைமயிரின் தோற்றம் நமக்கு இவ்வளவு பெரிய அசுப

மாகப் படுகிறது. அலைகளின் கொந்தளிப்பற்று அமைதியான கடலில் கப்பல் உல்லாசமாகச் சென்று கொண்டிருக்கும்போது திடீரென்று அடிவானம் கறுத்துத் தோன்றுவதைக் கண்டு கப்பலோட்டி அடையும் கவலை கூட வயோதிகத்தின் இந்த வெண்மைச் சின்னத்தைக் கண்டு நாம் கொள்ளும் கவலைக்கு நிகராகாது என்றே கூறிவிடலாம்.

'பிறர் பார்த்துவிடுவார்களே' என்பதைக்காட்டிலும் பன்மடங்கு அதிகமாக வேறோர் எண்ணந்தான் நம் உள்ளத்தைப் பாதிக்கிறது. 'ஏன் தோன்றியிருக்கிறது? அதன் பொருள் இதுவல்லவா?' என்றெல்லாம் நாம் யோசனையில் ஆழ்ந்துவிடுகிறோம். நரைமயிரைப்பற்றிய நினைவே இல்லாமல் இருக்கும்போது திடீரென்று ஒரு நாள் அதைக் காணும்போதுதான் நமக்கு இத்தகைய கலவரம் ஏற்படுகிறது. அதனாலேயே எதிர்காலமானது இவ்வளவு மங்கி இருளடைந்து நமக்கு மிகவும் வேண்டாததாகி விடுகிறது.

சில பேர்களை வெகு சீக்கிரமாகவே மூப்பின் தூதர்கள் பேட்டி காண வந்துவிடுவார்கள். இப்போது சமயம் இல்லை என்று அவர்களைப் போகச் சொல்வதோ முடியாது. இந்த நிலையில் பாவம், அவர்கள் என்ன செய்வார்கள்! போனால் போகிறதென்று பொறுத்துக் கொண்டு மனத்தைச் சந்தோஷமாக வைத்துக்கொள்வதை விட்டு வேறு வழி என்ன இருக்கிறது? ஆனால் இதில் அவர்களுக்கு ஒரு தனி லாபம் உண்டு என்று சொன்னால் தவறில்லை. ஏனெனில் திடீரென்று ஒரு நாள் ஒரு நரைமயிரைப் பார்த்து அவர்கள் திடுக்கிடும்படி நேருவதில்லை. தவிர, இளமையிலேயே நரைமயிர் தோன்றியிருந்தாலும் அதற்குத் தக்கபடி பிறகு வேகமாக அவைகள் விருத்தியாகாமல் நின்றுவிடுவதால் மொத்தத்தில் அவர்கள் நிலைமைக்கு அதிகமான பாதகம் ஏற்படவில்லை என்றே சொல்லலாம்.

சார்லஸ் லாம்ப் என்னும் ஆங்கில ஆசிரியர் தம்முடைய கட்டுரை ஒன்றில், "வயதாகும் முன்னமேயே சென்று எதிர்கொள்ளும் மனிதர்கள் இருக்கிறார்களே; அவர்களைக் கண்டாலே எனக்கு ஆவதில்லை" என்று சொல்கிறார். அவர் அவ்வாறு குறைகூறுவானேன்? அதன் அர்த்தம் நமக்கு நன்கு புலப்படுகிறதல்லவா? அவர் சொல்லியபடி வயதைத் தாமே சென்று எதிர் கொள்ளாத மனிதர்கள் இருப்பார்கள், ஆனால் அவர்கள் வயதை அடியோடு அலக்ஷ்யம் செய்பவர்களாகவும் இருப்பார்கள். காலம் என்ற பகைவனைத் தந்திரமாக ஏமாற்றி ஐம்பது வயதில் இருபது வயதுபோல் காண்பித்துக் கொள்ள அவர்கள் பின்வாங்குவதில்லை. ஆனால் மூப்பு ஆக்கிரமிக்கத் தொடங்கிவிட்டால் அதைப் பிறர் கண்டுகொள்ளாமலும் இருக்க முடியுமா? அதிவிரைவாக ஓடிக்கொண் டிருக்கும் இளமைப் பருவத்தை விடாமல் கட்டிப் பிடித்துக்கொண் டிருக்கும் மனிதர்களின் நிலைமைதான் எவ்வளவு பரிதாபகரமானது!

'மூப்பு அணுகாமல் பார்த்துக்கொள்ளுவோம்' என்பதோ ஒருபோதும் நடவாத காரியம். இந்த விரோதியை நாம் ஜயித்துவிட்டோம் என்ற பெருமை நமக்கு என்றும் கிட்டத் தக்கதல்ல. அந்தப் பகைவன் நம்மைத் தன் வசமாக்கிக்கொண் டிருக்கும்போது நாம் மனம் இடிந்துபோகாமல் அறிவுடன் நடந்துகொள்வதே நமக்குப் பெருமையை அளிப்பதாகும். வயது நம் உற்சாகத்தைக் குலைத்துவிடாமல் பார்த்துக்கொள்ள வேண்டும். அதில்தான் நமது வெற்றியெல்லாம் இருக்கிறது என்று கூறலாம்.

'கிழத்தன்மையைப்பற்றி நினைக்கும்போதே நாம் ஏன் இவ்வளவு மிரண்டுபோக வேண்டும்? அது என்ன அவ்வளவு பயங்கரமானதா?' என்று தோன்றலாம். நமது லோக யாத்திரையில் நாம் நடந்து செல்ல வேண்டிய பக்கந்தானே அது! இளஞ் சூரியனின் செங்

கிரணங்களுடன் கூடிய காலை வேளை எவ்வளவோ மனோ ரம்மியமாக இருக்கிறது! அதே சூரியன்தான் பிறகு வானம் முழுவதையும் வியாபித்துத் தேஜோமயமாக ஜொலிக்கும் காந்தியுடன் விளங்குகிறான். இன்னும் சற்று நேரம் கழித்துப் பார்ப்போமாயின் அந்தச் சூரியனே தன் செஞ்சுடர் ஒளியெல்லாம் அடங்கி மிருதுவான மஞ்சள் வெயிலுடன் சாந்தமயமாகத் தோன்றுகிறான் அல்லவா?

மூப்பிலும் சில செளகரியங்கள், சந்தோஷங்கள் இருக்கத்தான் இருக்கின்றன. வயதானவர் கஷ்டப்படும் போது நம் மனம் இளகாமல் இருப்பதுண்டா? ஷேக்ஸ்பியர் மகாகவி ஒரு சோக நாடகம் எழுதியிருக் கிறார். அதில் லியர் (Lear) என்னும் அரசன் தந்தையா யிருந்து படும் துயரம் ஒருபக்கம் இருக்க, எண்பது வயது சென்ற ஒரு தள்ளாத கிழவன் என்று இல்லாதிருந்தால் நாடகத்தின் சோக ரசம் இவ்வளவு அதிகரித்திருக்குமா என்றுதான் தோன்றுகிறது. வயதானவர்களின் சாந் தமும் கம்பீரமும் கலந்த இனிய தோற்றம் அவர்க ளுக்குச் சில சமயம் ஒரு தனிச் சிறப்பை அளிக்கிறது.

உண்மையில் வயதானதனாலேயே நமக்கு அவர்கள் மீதுள்ள பாசம் இன்னும் அதிகமாகிறதென்றே கூற லாம். அப்படிப்பட்ட இச்சீவன்கள் உலகில் இல்லா மலே போய்விடுவதை நாம் விரும்புவோமா? தேவர் களைப்போல் என்றும் மாறாத யெளவனத்தை மனிதர் கள் அடைந்துவிடுவதென்றால் எப்படி இருக்கும்?

"இளமைப் பருவத்தினர்களின் நடுவில் தோல் சுருங்கித் தலை நரைத்த இந்தக் கிழப் பாட்டி எதற்கு?" என்று அவள் பேரனைக் கேளுங்கள். அவள் வேண்டா மென்று ஒரு நாளும் அவன் சொல்லமாட்டான். ஒரு ராஜ்யம் கிடைப்பதாக இருந்தாலும் அதற்குப் பதில் தன் கிழப்பாட்டியை இழக்க அவன் சம்மதியான். ஏனெனில் அவ்விருவருக்கும் உள்ள ஒற்றுமையும் பாங்

தவ்யமும் அவ்வளவு நெருக்கமானவை. அதை அச் சிறுவனும் நன்கு அறிந்துகொண் டிருக்கிறான். அந்தத் தோல் சுருங்கிய முகமும் நரைத்த தலையுமே அவனுக்கு யாவற்றையும் விட அதிகப் பிரியமாக இருக்கின்றன. பாட்டியின் மனோபாவமும் இவ்விதமே அமைந்திருக்க லாம். ஏனெனில் ஆசையுடன் தன்னை எப்போதும் சூழ்ந்துகொண் டிருக்கும் பேரன்மார்களைக் கண்டு அவளும் நரைத்தலையாகிய தன் கிழத்தன்மையை வெறுக்காமல் பாராட்டுவாள் என்றே நாம் ஏன் எண்ணலாகாது?

# 10

## காதலில்லாமல் கதை முடியுமா ?

உலகில் யுத்தம் இல்லாமல் இருக்க முடியுமா என்று கேட்டால் என்ன பதில் சொல்லுவது? ‘அதற்கு என்ன பிரமாதம்? யுத்தத்தைக் கிளப்பியவர்கள் நிறுத்தி விட்டால், யுத்தம் தானே நின்று போய்விடுகிறது’ என்று உடனே பதில் சொல்லத்தோன்றுகிறதல்லவா? ஆனால் உலக சமாதானத்துக்காகப் பெரும்பாடு பட்டுக்கொண்டிருக்கும்போதே யுத்த வெறி மீளவும் தலைதூக்கி ஆடுவதைப் பார்த்தால் இந்த யுத்தத்தைக் கடவுள்தான் பார்த்து நிறுத்தவேண்டுமென்றே எண்ணவேண்டி இருக்கிறது. ‘காதல் இல்லாக் கதைகள் முடியுமா?’ என்னும் கேள்வி அம்மாதிரியான கேள்வி அல்ல; அவ்வளவு மனம் சோர்ந்துபோய்க் கடவுள்மேல் பாரத்தைப் போட்டுவிடும்படியான நிலைமை ஒன்றும் நமக்கு இப்போது ஏற்பட்டுவிடவில்லையென்று நாம் தைரியமாகச் சொல்லலாம்.

‘காதல் இல்லாமல் கதை முடியுமா?’ இந்தக் கேள்வியில், காதல் இல்லாமல் கதைகள் எழுத முடியுமா? என்பதுடன், காதல் இல்லாக் கதைகள் எழுதினால் வாசகர்கள் ரசிப்பார்களா? என்ற கேள்வியும் சேர்ந்து இருக்கிறது. அது மட்டும் அல்ல; காதல் இல்லாமல் கதைகள் இருக்க முடியாதா? என்றும் ஒரு கேள்வி தொனிக்கிறது. அத்தகைய சந்தேகம் ஏன் உதிக்க வேண்டும்?

இதற்குப் பதில் கூறும் முன் கதை என்பதைப் பற்றியே சற்று ஆராய்வோம். கடவுள் மனிதனைச் சிருஷ்டித்திருக்கிறார். மனிதன் தன் கற்பனா சக்தியினால் கதையைச் சிருஷ்டிக்கிறான். ஆகவே உலகம்

தோன்றின நாள்முதல் கதையும் தோன்றிவிட்டது. அவ்வாறே உலகம் இருக்கும் வரையிலும் கதையும் இருந்துதான் தீரும். "குழந்தைகளாக இருக்கும்போது நாம் பெரியவர்களிடம் கதை கேட்கிறோம். நாம் பெரியவர்களான பிறகு நம் குழந்தைகளுக்குக் கதை சொல்லுகிறோம். நாம் இறந்த பிறகு நாமே கதையாகிவிடுகிறோம்" என்று ஹிந்தியில் ஓர் ஆசிரியர் கூறுகிறார். நம்மைப் போலவே ஆடவர்களையும் பெண்களையும் சிருஷ்டித்து அவர்களுக்கு நம்முடையவைபோன்ற சுக துக்கங்களை அமைத்துப் பார்ப்பதில் நமக்கு ஒரு தனிச் சந்தோஷம் ஏற்படுகிறது. அவ்வகையான ஒரு சந்தோஷம் மிகவும் அவசியம் என்று இராத பக்ஷத்தில், கதை சொல்லுவது, கேட்பது என்ற வழக்கம் உலகமெங்கும் இயற்கைக் குணமாகக் காணப்படாதல்லவா? பண்டைக் காலத்தில் பெரும்பாலும் நீதிக்கதைகளே அவசியமென்று கருதப்பட்டன. ஆயினும் அதற்காகக் காதல் சுவையுள்ள கதைகள் அக்காலத்தில் எழுதப்படவில்லையென்றும் சொல்லுவதற்கு இல்லை.

காவியங்களில் சிறந்த காவியமாகிய வால்மீகி ராமாயணம் காதல் கதைதான்; தந்தை சொல்லைக் காப்பதற்காக ராஜ்யத்தைத் துறந்து சென்ற தியாகத்தைக் காட்டிலும் ராமரும் சீதையும் ஒருவர் மேல் ஒருவர் கொண்டிருந்த அளவற்ற காதலும் ஒருவரை ஒருவர் பிரிந்து பட்ட ஏக்கமுமே கதையில் நமக்குப் பிரதானமாகத் தோன்றுகின்றன. என்றாலும் வாழ்வையே மேன்மையாகச் செய்யக்கூடிய தெய்விகமான காதல் அது. அத்தகைய பரிசுத்தமான காதலைத்தான் கவிகள் அனைவரும் வாழ்க்கையின் முக்கிய அம்சமாகச் சித்திரித்து அதில் தம் கற்பனைத் திறன் முழுவதையும் காட்டியிருக்கிறார்கள்.

'காதல், காதல், காதல்; காதல் போயிற் சாதல். காதலிலே இன்பமெய்திக் களித்து நின்றால் கனமான

மன்னவர்போர் எண்ணுவாரோ? மாதருடன் மன மொன்றி மயங்கிவிட்டால், மந்திரிமார் போர்த்தொழி லில் மனங்கொள்வாரோ?'' என்று இவ்வாறெல்லாம் பாரதியாரும் பாடியிருக்கிறார்.

மேல்நாட்டில் மெடீவல் (Medieval) என்று சொல்லப்படும் இடைக்காலத்திலும் காதலைத்தான் பெரி தாகக் கொண்டாடி எழுதியிருக்கிறார்கள். அக்காலத்தில் ஒரு பெண்மணியின் காதலைப் பெறுவதற்காக வாலிபர் கள் எவ்வளவோ வீரச்செயல்கள் இயற்றுவார்கள். அப் பெண்மணியின் சிறு புன்னகைக்காகத் தங்கள் உயி ரையே அர்ப்பணம் செய்துவிடுவார்கள். காதலை அவ்வ ளவு போற்றியதனால்தான், 'காதலே இல்லாமல் இருப்பதைக்காட்டிலும் காதலித்து இழந்தாலும் மேல்' என்ற வசனம் ஆங்கிலத்தில் ஏற்பட்டிருக் கிறது.

நம் நாட்டில் ராஜபுத்திரர்களது காலத்தை எடுத் துக்கொள்வோம். மனத்துக்கு இசைந்த மங்கையின் காத லுக்காகச் சாகசச் செயல்கள் புரிந்திருக்கும் வீரர்களு டைய கதைகள் எவ்வளவு இருக்கின்றன! ஆனால் அக் காலத்தில் போற்றப்பட்ட காதலுக்கும், நாம் இப்போது வாசிக்கும் கதைகளில் வரும் காதலுக்கும் மலைக்கும் மடு வுக்கும் உள்ள பேதம் காணப்படுகிறது. ஆங்கிலத்தில், 'நிரந்தர முக்கோணம்' என்று சொல்லுவது உண்டு. அதாவது இரண்டு புருஷர்கள், ஒரு ஸ்திரீ; அல்லது இரண்டு ஸ்திரீகள், ஒரு புருஷன். இவர்களில் ஒரு புருஷனும் ஒரு ஸ்திரீயும் ஒருவரை ஒருவர் காதலிப்பது; அம் மூன்றுவது ஸ்திரீயோ புருஷனோ அக்காதலுக்கு இடையூறுகள் விளைவிப்பது; முடிவில் ஆசிரியர் இஷ்டப்படி கதையைக் கொட்டுமேளத் தடனே அழுகையுடனே முடித்துவிடுவது. மேற் சொன்ன முறையில்தான் நூற்றுக்குத் தொண்ணூறு கதைகளின் போக்கு அமைந்திருக்கிறது.





நம் புராணக் கதைகளை எடுத்துக்கொண்டால் சத்தியம், கடமை, தியாகம், பரோபகாரம், காருண்யம் முதலிய நற்குணங்களைத் தனித்தனியே எடுத்துக்காட்டும் கதைகள் எவ்வளவோ இருக்கின்றன. ராமாயணத்தைத்தான் காதல் கதை என்று சொன்னோம். இரும்புக்கும் காந்தத்துக்கும், சந்திரனுக்கும் கடலுக்கும் பரஸ்பரம் ஆகர்ஷிக்கும் சக்தி இருப்பதுபோல், உலகம் ஏற்பட்ட நாள் முதல் புருஷனும் ஸ்திரீயும் ஒருவரை ஒருவர் கண்டு காமுறுவது இயற்கை; அதைப்பற்றி எவ்வளவு எழுதினாலும் நியாயந்தான். என்றாலும், சம்ஸ்கிருதத்தில் மற்றொரு பெரிய காவியமாகிய மகாபாரதத்தை நாம் என்ன கதை என்று சொல்வது? ராஜ்யத்துக்காக இரு குடும்பங்கள் சண்டையிட்டதைத் தவிரக் காதலையும் கல்யாணத்தையும்பற்றிப் பாரதத்தில் என்ன கதை இருக்கிறது? மண்ணாசை, பொன்னாசை என்றபடி அதிகாரத்திலும் பொருளிலும் மோகம் கொள்ளுவது மனித இயல்பே அல்லவா? ஆகவே அதைப்பற்றி எழுதுவதும் மிகவும் பொருத்தமாகவே தோன்றுகிறது.

ஆங்கிலத்தில் ஷேக்ஸ்பியர் மகாகவி 'ரோமியோவும் ஜூலியட்டும்' என்ற நாடகம் எழுதியிருக்கிறார். அதில் முதல் வரியிலிருந்து கடைசி வரி வரையிலும் காதலைப்பற்றித்தான் இருக்கிறது. ரோமியோ, ஜூலியட் இவர்களுடைய காதல் வெள்ளத்தில் படிப்பவர்களும் முழுகி மெய்ம்மறந்துவிடுகிறார்கள். எல்லாம் ஒரே காதல்மயமாகத் தோன்றுகிறது. இத்தகைய நாடகத்தை எழுதிய கவியே மக்பத் என்னும் நாடகத்தையும் எழுதியிருக்கிறார். மனிதன் பேராசைப் பேய் பிடித்து உணர்வழிந்துபோய் இயற்கைக்கு மாறாகக் கொடிய செயல்களுக்கு உள்ளாகும் பரிதாபத்துக்கு இந்த நாடகத்தைக்காட்டிலும் பெரிய அத்தாட்சி வேறு இருக்கமுடியாது. இந்தக் கதையில் காதல் என்பது மருந்துக்கும் இல்லை. அதற்குப் பதில் பேராசையே நிரம்பியிருக்கிறது. ஷேக்ஸ்பியர் உலக இயல்பை நன்கு அறிந்த

வராதலின் மனிதனை வசப்படுத்தக் காதலுக்கு எவ்வளவு சக்தியுண்டோ அவ்வளவு பேராசை, பொறாமை முதலிய கொடிய குணங்களுக்கும் உண்டு என்பதை அறிந்தவர். ஆகையால்தான் ஒன்றுக்கொன்று முற்றும் வேறான நாடகங்கள் இயற்ற அவரால் முடிந்திருக்கிறது.

இப்போது, 'காதலில்லாக் கதைகள் முடியுமா?' என்ற கேள்விக்கு, 'ஏன் முடியாது?' என்று நாம் தைரியமாக விடை அளிக்கலாம். உயிரற்ற, ரசமற்ற காதற்கதைகளே பெரும்பாலும் பத்திரிகை வாயிலாகவும் புஸ்தக ரூபமாகவும் வெளிவருவதால் நமக்கு இந்தச் சந்தேகம் எழுகின்றது. ஆனால் காதலைத்தவிர வேறு விஷயங்களைப்பற்றிய கதைகள் எழுதுவதில் எழுத்தாளர்களுக்குத் தேர்ச்சி இல்லை என்றோ அப்படி எழுதினாலும் அத்தகைய கதைகளை வாசகர்கள் படித்து இன்புறமாட்டார்கள் என்றோ நினைப்பது தவறு. எழுதுகிறபடி எழுதினால், எவ்வளவு சாதாரண விஷயமும் சிறந்த இலக்கியமாக மாறிவிடும் என்பதை யார் சந்தேகிக்க முடியும்? தமிழில் காதலைப்பற்றியே இல்லாமல் சாதாரணமான குடும்ப விஷயத்தைப்பற்றியே எழுதியிருக்கும் ஒரு கதையை எடுத்துக்கொள்வோம். காலம் சென்ற பண்டித நடேச சாஸ்திரி அவர்கள் எழுதிய, 'ஸ்ரீ மாமி கொலுவிருக்கை' என்னும் கதையை அநேகமாக எல்லாரும் படித்திருப்பார்கள். 'ஸ்ரீ மாமி கொலுவிருக்கை'யில் எந்த அழகிய வாலிபனும் ஓர் அழகிய யுவதியைச் சந்தித்துக் காதல் கொள்ளவில்லை. கேவலம் ஒரு மாமியார் மருமகளைப் படுத்தும் அற்ப விஷயந்தான். ஆயினும் அது சிறந்த இலக்கியக் கதையாகவே விளங்குகிறதென்று கூறலாம். இதற்குக் காரணம் சாதாரணமான குடும்ப விஷயத்தை ஆசிரியர் கையாண்டிருக்கும் திறமையேதான். உண்மைக்கு மாறுபடாமல் இருப்பதுடன் மாமியாரான மகா சுவேதை, நாட்டுப்பெண் கௌரி, கதையில் வரும் இன்னும் மற்றவர்கள் அனைவரும் நம்மைச் சுற்றிலும்

நாம் பார்க்கும் உயிருள்ள மனிதர்களாகவே தோன்று கிருர்கள். காதல் கதைதான் வாசகர்களுக்குப் பிரிய மானது என்ற எண்ணத்தைக் காதல் லவலேசமும் இல் லாத இந்தக் கதை அடியோடு அகற்றிவிடுகிறது என் பதில் என்ன சந்தேகம்?

ஆங்கிலத்தில், 'கிரான்போர்டு' என்ற ஒரு நாவல் இருக்கிறது. அது, 'காதல் இல்லாமல் கதைகள் எழுத முடியும்; அவற்றைப் படித்து நாம் இன்புறவும் முடியும் என்பதற்கு மிகச் சிறந்த உதாரணமாக இருக்கிறது. அதை உண்மையில் கதை என்றே சொல்வதற்கில்லை. எழுதியவர் ஒரு ஸ்திரீ. அந்தக் கதையைப் படித்து முடித்த பிறகு, 'மனத்துக்கு இன்பமாவது உற்சாக மாவது ஊட்டக்கூடிய விஷயங்களே இதில் ஒன்றும் இல்லாமல் இருந்தும் நாம் இவ்வளவு ருசியுடன் இதை எப்படிப் படிக்க முடிந்தது?' என்று நினைக்க எனக்கு மிக வும் ஆச்சரியம் உண்டாயிற்று. நகரத்தின் வேடிக்கை, விநோதம் ஒன்றும் இல்லாமல் அமைதி குடிகொண்டி ருக்கும் ஒரு கிராமம். அதில் உள்ள வயதான நாலைந்து ஸ்திரீகளை மட்டுமே எடுத்துக்கொண்டு அவர்களின் அர்த்தமற்ற பழக்க வழக்கங்கள், நகரத்தில் இருப்பவர் களுக்கு மிகவும் அற்பமாகத் தோன்றும் சிறு கவலைகள், பயங்கள், சந்தோஷங்கள் இவைகளைப்பற்றியே விவரித்து ஆசிரியை ஹாஸ்யரசத்துடன் ஒரு பெரிய புஸ்தகம் எழுதிவிட்டாள். அதில் வரும் ஸ்திரீகள் பெரும்பாலும் ஐம்பது வயதுக்கு மேற்பட்டவர்கள்; கல்யாணம் இல்லாதவர்கள். காதல், கல்யாணம் என்ற வார்த்தைகளே அவர்களுக்கு மிகவும் அதிசயமாகத் தோன்றுகின்றன. அப்படி இருந்தும், 'நாலைந்து கிழவி களைப்பற்றிய ஒரு கதையா?' என்ற அலக்ஷ்யம் தோன் ருமல் நாம் உற்சாகத்துடன் இதைப் படிப்பது பெரிய விந்தையல்லவா?

வங்காளியில் பிரபல ஆசிரியர் பங்கிம் சந்திர சட்டர்ஜீ அவர்கள் எழுதிய ஆனந்த மடம் என்னும்

நாவலை எடுத்துக்கொள்வோம். அதில் பிரதானமாக அமைந்திருப்பது தேச உணர்ச்சி. அந்தக் கதையைப் படிக்கும்போது நம் மனத்திலும் அந்தப் பெரிய உணர்ச்சி எழும்புகிறது. இதைப்போலவே தேச பக்தி, கடமை, தியாகம் முதலிய சிறந்த குணங்களை அடிப் படையாகக் கொண்ட நாவல்களோ சிறு கதைகளோ அதிகமாக ஏன் இயற்றலாகாது?

சமூகம், மதம், அரசியல் இவை சம்பந்தமான கொள்கைகளில் பெரும் மாறுதல் ஏற்படும்போதுதான் எழுதுபவர்களின் கற்பனு சக்திக்கு அரிய சந்தர்ப்பம் வாய்க்கிறது. மாருமல் அடிபட்ட ஒரே பாதையை விட்டுப் புதிய வழிகளை அப்போதுதான் எழுத்தாளர் கள் பின்பற்றுவார்கள். மேல்நாட்டார் காதல் ஒன்று தான் எழுதுவதற்குரிய விஷயம் என்று எண்ணுவ தில்லை. அங்கே ஆசிரியர்கள் பல வேறு விதமான விஷ யங்களைக் கையாளுகிருர்கள். பயங்கரமான கொலை வழக்குகள், அவைகளைப்பற்றிய விசாரணைகள், நுட்ப மான உளவுகளைக் கண்டுபிடித்து உண்மையைத் துலக் கக்கூடிய துப்பறியும் கதைகள் இவற்றை நாம் எவ் வளவு உற்சாகத்துடனும் ருசியுடனும் படிக்கிருேம்!

குழந்தைகளின் மனத்தத்துவத்தைக் கதைகள் எழு துவதற்குரிய சிறந்த விஷயமாகக் கொள்ளலாம். இது சம்பந்தமான கதைகளையும் காவியங்களையும் கவி ரவீந் திரநாத் டாகுர் எவ்வளவோ அழகாக எழுதியிருக்கிருர். ஒரு குழந்தையின் மனேபாவத்தை உள்ளபடி அறிந்து எழுதுவது சாதாரண விஷயமா? அதற்கு எவ்வளவு ஆழ்ந்த மனேதர்மம் இருக்கவேண்டும்! டாகுர் எழுதிய ‘காபுலிவாலா’ என்பது போன்ற கதைகளைப் படித்தால் இது நமக்கு எளிதில் புலப்படும்.

மேல்நாட்டில் ஆண், பெண்கள் சகஜமாகச் சேர்ந்து பழகுவதால் அவர்களுள் ஒருவர்மேல் ஒருவர் காதல் கொள்வது, அக்காதலில் போட்டி, பொருமைமுதலியன

ஏற்பட்டுக் கஷ்டங்கள் விளைவது முதலிய விஷயங்கள் காணப்படுவது மிகவும் இயற்கை. ஆகவே அங்கே அவ்வாறான கதைகள் ஏராளமாகத் தோன்றுவதற்கும் மிக்க நியாயம் இருக்கலாம். ஆனால் நம் சமூகத்திலோ ஆண், பெண்கள் சேர்ந்து பழகுவது, காதலிப்பது என்பது வழக்கமில்லை. அப்படி இருக்கும்போது அவ்வாறான கதைகள் எழுதுவது உண்மைக்குச் சற்று விரோதமே அல்லவா ?

'காதல் இல்லாக் கதைகள் முடியுமா?' என்ற கேள்வியை, 'காதல் இல்லாத ஸினிமாப் படங்கள் முடியுமா?' என்று நாம் சற்று மாற்றிக் கேட்கலாம். சிருங்கார ரசம் இருந்தால்தான் பொதுமக்கள் ரஸிப்பார்கள் என்ற கொள்கையை மேற்கொண்டு காதல் இல்லாத படங்களே கூடாவென்று படம் தயாரிப்பவர்கள் முடிவு செய்துவிட்டார்களென்று தோன்றுகிறது. இல்லாவிட்டால் பக்தி ரசமே பிரதானமான நந்தனார் சரித்திரத்திலும், வேதியரும் அவர் மனைவியும் சரச சல்லாபம் புரிவதாக ஒரு காட்சியை வைப்பார்களா?

காதலைத் தவிர மனிதன் மனத்தை முற்றும் வசப்படுத்தக்கூடிய சிறந்த உணர்ச்சிகள் வேறு எவ்வளவோ இருக்கின்றன. இவைகளை நன்கு ஆராய்ந்தறிந்து ஆசிரியர்கள் எவ்வளவோ ரசமான கதைகள் எழுத முடியும் என்பது நிச்சயம். இந்த உண்மையை உணர்ந்து இந்த முயற்சியில் ஈடுபட்டால் இலக்கியத்துக்குப் பெரும் பயன் ஏற்படும் என்பதில் தடையில்லை.

11

# சமூகமும் நாமும்

வெறும் பொழுதுபோக்கு விளையாட்டு ஒன்று: சிறியதும் பெரியதுமாகப் பல வடிவத்திலுள்ள துண்டுகளை ஒன்றோடொன்று பொருத்திவைத்தால் கடைசியில் ஓர் அழகான படமாகத் தென்படும் அல்லவா? ஆனால் அவை இறைந்து கிடப்பதைப் பார்க்கும் போது முதலில் நம் மனம் எவ்வளவு கலவரம் அடைகிறது! அதுபோலவேதான் என் எண்ணங்களும் ஒன்றோடொன்று சேராமல் தாறுமாறாகக் கிடந்தன. வெறும் எண்ணங்களை வைத்துக்கொண்டு என்ன செய்வது? அவைகளையெல்லாம் ஒன்று சேர்த்து ஓர் உருவாக்கக்கூடிய சக்தி வேண்டாமா?

ஆங்கிலக் கட்டுரை ஒன்றில் ஒரு விஷயம் படித்தேன். "ஜான், ஹாரி இருவரும் பேசிக்கொண்டிருக்கிறார்கள் என்றால், இருவர் மட்டும் அல்ல; உண்மையில் அங்கே ஆறு பேர் பேசிக்கொண்டிருக்கிறார்கள் என்றே சொல்ல வேண்டும்" என்கிறார் ஆசிரியர்.

"என்ன இது? புதிய கணக்காக இருக்கிறதே! இரண்டு எப்படி ஆறு ஆகும்?" என்று கேட்கிறீர்களா? உண்மையே. அதைப் படிக்கும்போது நானும் அப்படித்தான் ஒரு கணம் திகைத்தேன். ஆனால் அடுத்தாற்போல் ஆசிரியர் எழுதியிருக்கும் வாக்கியங்களைப் படித்தபோது எனக்கு என்னை அறியாமலே சிரிப்பு வந்துவிட்டது. அவர் எழுதுவதைக் கேளுங்கள்:

"இருவர் பேசும்போது இரண்டு பக்கத்திலும் மூன்று மூன்று பேர்: அதாவது மொத்தம் ஆறு

பேர் சேர்ந்து பேசிக்கொண் டிருப்பதாகவே சொல்ல வேண்டும். எப்படியெனில், கடவுள் சிருஷ்டித்த ஜான் ஒன்று; தன்னைப்பற்றி நினைத்துக்கொண் டிருக்கும் ஜான் இரண்டு; ஜானைப்பற்றிப் பிறர் நினைத்துக்கொண் டிருக்கும் ஜான் மூன்று. இப்படியே ஹாரியைப்பற்றி யும். ஆகவே ஒவ்வொருவரும் உண்மையில் மூன்று மனி தர்களாகவே இருக்கிறார்கள்'' என்கிறார். அவர் ஆராய்ச்சி எவ்வளவு சரியாக இருக்கிறது! அது ஜான், ஹாரி இருவருக்கும் மட்டும் அல்ல, உலகில் எல்லோ ருக்குமே பொருந்தும்.

இதைப் பார்க்கும்போது, கடவுள் பிறப்பித்தபடி தானே நாம் இருக்க வேண்டும்! அதைவிட்டு நம்மை வேறுவிதமாகப் பாவித்துக்கொண்டால் அல்லவா ஒரு வர் மூவர் ஆகும் நிலைமை ஏற்படுகிறது என்று தோன்று கிறது. ஒருவரும் தாம் நினைக்கும் விதம் மற்றவர் கண் ணுக்குத் தோன்றுவதில்லை. ஏன்?

ஜயாவை எடுத்துக்கொள்வோம். ஜயா சாதாரண அழகுள்ள பெண். ஆனால் அவள் தன்னைப்பற்றிக் கற்பனை செய்திருக்கும் ஜயாவும் நாம் நினைக்கும் ஜயாவும் ஒன்றல்ல. வேறு வேறுதான். இது அவளுக்குத் தெரி யாது.

செல்லம் இயற்கையில் கறுப்பு; கொஞ்சம் பரும னுங்கூட. பருமனும் கறுப்பும் உலகில் இல்லவே இல் லையா? 'ஏதோ கடவுள் இப்படி நம்மைப் படைத்து விட்டார்' என்று இருந்துவிட்டால் கவலை இல்லை. ஆனால் செல்லம் இவ்வாறு விட்டுக்கொடுப்பவளாக இருந்தால் தானே! தன்னை ஒருவிதமாக அலங்கரித்துக்கொண்டால் அக்குறைகள் மறைந்துவிடும் என்ற நம்பிக்கை அவ ளுக்கு. 'ஐயோ பாவம்! இந்த நம்பிக்கையை என் கெடுக்கவேண்டும்?' என்று பிறர் நினைப்பார்களா? இன் னும் அதிகமாகவே தங்கள் ஏளனத்தைக் காட்டுவார்கள்.

ஸ்ரீமதி ...க்கு மேடைமீதேறிப் பிரசங்கம் செய்யும் திறமை இல்லை. ஆனால் அவ்விஷயம் அந்த அம்மாளுக் குத் தெரியவே தெரியாது. தான் வெகு சாதுரியமாக வும் அழகாகவும் பேசிவிட்டதாக நினைத்துப் பெருமை யுடன் எதிரில் இருப்பவர்களை அவள் நோக்கும்போது அவர்கள் என்ன செய்வார்கள்? தங்களுக்கு வரும் புன் னகையைச் சிரமத்துடன் அடக்கிக்கொள்ள வேண்டியது தான் அல்லவா?

சுபாவத்தை ஒளிப்பது என்பது சாத்தியமல்ல. அது எப்படியாவது வெளியாகிவிடும். சுயநலமே கண் ணாக இருப்பவர்களை - அவர்கள் என்னதான் ஒன்றும் அறியாதவர்கள்போல் நடந்தாலும் - நாம் எப்படியோ கண்டுபிடித்துவிடுகிறோம். ஆனால் வெகு சாமர்த்திய மாக நம்மை ஏமாற்றிவிட்டதாக அவர்கள் நம்பிக் கொண்டிருக்கிறார்களே, அதுதான் பரிதாபம்.

வசீகரமான முகமும் நல்ல பேச்சுத் திறமையும் வாய்ந்த ஒருவர் தம் தோற்றமும் பேச்சும் பிறர் மனத் தைக் கவராமல் இருக்க முடியாது என்று எண்ணிக் கொள்வது சகஜம். ஆனால் தாம் அவ்வாறு நினைப்பது தெரிந்தவுடனேயே, பிறருக்கும் தம்மிடம் குறைகள் தோன்றிவிடும் என்பதை அவர் எப்படி அறிவார்?

நாம் நினைப்பதும் மற்றவர் நம்மைப்பற்றி நினைப் பதும் எப்படியோ போகட்டும். நம் இயல்பின்படி இருந்துவிட்டால் ஒரு தொல்லையும் இல்லையே என்று தோன்றலாம். ஆயினும் அவ்வாறு நாம் இருப்பது முற்றும் சாத்தியமா என்றுதான் கேட்கிறேன். இந்தச் சமூகம் அதற்கு இடம் கொடுக்குமா? மனித சஞ்சார மற்ற ஒரு தீவில் காலம் தள்ளுவதாக இருந்தால் கவலை இல்லை; நம் இஷ்டம்போல் நடந்துகொள்ளலாம். ஆனால் இந்த நாகரிக சமூகத்தில் அன்றோ நாம் வாழ்க்கைநடத்த வேண்டி இருக்கிறது! அதற்கும் நமக்கும் உள்ள உறவு நாமாக ஏற்படுத்திக்கொண்டதுதான்; எனினும் அது

இன்று நேற்று ஏற்பட்டதல்ல. வெகுகாலமாக உள்ளது. நம் சொந்த உறவினர்களைக்கூட நாம் அசட்டை செய்யலாம். ஆனால் இந்தச் சமூக உறவை ஒருபோதும் அசட்டை செய்ய முடியாது.

சமூகத்தில் பழகுவதே ஒரு தனிக் கலை. அதில் எல்லோரும் தேர்ச்சி பெற்றிருப்பது சாத்தியமல்ல. தனிமையில் நமக்கு எவ்வளவோ நல்ல குணங்கள் இருக்கலாம். ஆனால் பிறரிடம் பழகும் விதம் தெரியாவிட்டால் அவை சோபிக்காமல் போய்விடும். நம்மை அறியாமலே பலருக்கும் வேண்டாதவர்களாகவும் ஆகிவிடுவோம். ஏனெனில் சமூகத்தில் பழகுவதிலும் சில கட்டுப்பாடுகள், சம்பிரதாயங்கள் உண்டு. அவை ஒரு சாஸ்திரத்திலும் விதிக்கப்பட்டவை அல்ல என்றாலும் அவைகளை மீறுவதைப்பற்றிச் சிலர் மனத்தாலும் எண்ணமாட்டார்கள். இன்ன இடத்துக்கு இன்ன விதமான ஆடைதான் அணிந்து செல்லவேண்டும், இன்னாருடன் இன்ன விதமாகத்தான் பேசவேண்டும் என்ற வரையறைகளை அவர்கள் வெகு சிரத்தையுடன் பின்பற்றுவார்கள். இந்தச் சமூகம் எதுவும் நினைத்துக்கொள்ளட்டும் என்று தைரியமாக இருப்பவர்கள் மிகக் குறைவு. அதை எதிர்க்கக்கூடியவன் மகா தீரனாகத்தான் இருக்கவேண்டும். ஏனெனில், தான் பழகும் மனிதர்களின் நன்மதிப்பைப் பெறுவது அவ்வளவு அவசியமாகத் தோன்றுகிறது. அதை இழந்துவிட்டால் பிறகு வாழ்க்கையே சாரமற்றதுபோல் ஆகிவிடுகிறது.

நமக்கு ஏற்பட்டுள்ள கடமைகள் யாவற்றையும் விடச் சமூகத்துக்கு நாம்செலுத்தவேண்டிய கடமைகளே அதிகமுக்கியமாகத் தோன்றுகின்றன. வீட்டில்உள்ளவர்களிடம் நம் கோப தாபங்களையோ விருப்பு வெறுப்புக்களையோ தாராளமாகக் காட்ட நாம் தயங்கமாட்டோம். ஆனால் நாம் வெளியே பழகும் நண்பர்களிடம் எவ்வளவு அடக்கத்துடன் நடந்துகொள்வது அவசியமாகிறது! வீட்டில் மரியாதையாகப் பேசாவிட்டால் பாதகமில்லை.

"யஜமானி அம்மாள் (அல்லது யஜமானன்) சற்று முன் கோபம் உள்ளவர்கள்" என்று பிறர் பொறுத்துக் கொண்டு போய்விடுவார்கள். ஆனால் வெளியில் அவ்வாறு முடியுமா? அடுத்த வீட்டுக்காரரை வாயில் வந்தபடி கோபத்தில் வைதுவிட்டுப் பிறகு, 'என் அகத்துக்காரர் என்று எண்ணி அப்படிப் பேசிவிட்டேன்' என்று சமாதானம் கூறினால் அதனால் அந்தத் தாம்பத்தியத்தின் அழகுதான் வெளியாகுமேயன்றி வேறென்ன?

யாவற்றையும்விட, நம் பேச்சும் மாதிரியுமே பிறருக்கு நம்மிடம் மதிப்பை உண்டாக்குகின்றன. ஆகையால்தான் வயது வந்த பெண் குடித்தனம் செய்யும் முறையைப் பயிலுவதுபோல் நாகரிக சமூகத்தில் செல்பவர்களும் அதில் பழகுவதில் தேர்ச்சி பெறவேண்டியிருக்கிறது.

சமூக வாழ்க்கையில் வெற்றியடைவதற்குரிய சிறந்த வழி, பிறர் தோற்றத்தையோ திறமையையோ இங்கிதமாகப் புகழ வேண்டும். வெளிப்படையாகப் புகழ்ந்தால்கூடத் தவறு இல்லை. ஆனால் பேசாமல் மட்டும் இருக்கக்கூடாது. மனத்தில் பட்டதைத்தான் பேசவேண்டும்; உண்மையாக நடக்க வேண்டும் என்று நினைப்பவர்களாக நாம் இருந்தால், அநேகருக்கு நம்மிடம் சிரத்தை குறைந்துவிடும். உள்ளும் புறமும் ஒன்றாக இருக்கும் விஷயத்தில், 'ஸ்ரீ மாமி கொலுவிருக்கை' என்ற கதையில் மகாசுவேதையின் முறையைப் பின்பற்றுவதே பலருக்குச் சௌகரியமாகத் தோன்றுகிறது.

"வெண்கலப்படி கமாச்தார் வீட்டில் கணக்கற்ற வேலைக்காரர்கள் இருக்கிறார்கள். இருந்தாலும் மாமியாரான மகாசுவேதையின் திட்டம் வேறுவிதமாக இருக்கிறது. வீட்டு நாட்டுப்பெண்கள் உலக்கை பிடித்து நெல் குத்திக்கொண் டிருப்பார்கள். வேலைக்காரிகளோ உல்லாசமாக வெற்றிலை போட்டுக்கொண்டு உட்கார்ந்

திருப்பார்கள். ஆனால் யாராவது வெளி மனிதர்கள் வந்திருக்கிறார்கள் என்று தெரிந்துவிட்டால் உடனே நாட்டுப்பெண்கள் உலக்கையை விட்டுவிட்டுச் சிரித்த முகத்துடனும் உபசார வார்த்தைகளுடனும் கூடத்துக்கு வந்துவிடுவார்கள். வேலைக்காரிகள் வெகு பணிவாகத் தங்கள் வேலையைச்செய்துகொண் டிருப்பார்கள். இவைகளையெல்லாம் பார்த்துவிட்டு வந்தவர்கள், 'பெரிய மனிதர்கள் வீடு என்றால் இப்படியல்லவா இருக்க வேண்டும்? மாமியாருக்கும் மருமகள்களுக்கும் என்ன ஒற்றுமை!' என்று அதிசயித்துக்கொண்டு போவார்கள்." இக்காட்சி எப்படி இருக்கிறது?

லௌகிக அறிவு விருத்தியாக விருத்தியாக, மேற்சொன்ன ரீதியைத்தான் நாமும் பின்பற்றத் தொடங்குகிறோம். "ரோம் தேசத்தில் ரோம் தேசத்திலுள்ளவர்களைப் போல்தான் நடக்க வேண்டும்" என்ற ஓர் ஆங்கிலப் பழமொழி உண்டல்லவா? அதுபோல் யதார்த்தமாக நடக்கவேண்டும் என்ற கொள்கையும் சமூக வாழ்க்கைக்கு அவ்வளவு ஏற்றதல்ல என்றுதான் தீர்மானிக்க வேண்டியிருக்கிறது.

# 12

# சுமித்திரை

ராமாயணத்தில் அயோத்தியாகாண்டம் படித்துக் கொண்டிருந்தேன். லக்ஷ்மணன் தாயாகிய சுமித்திராதேவியைப்பற்றிப் படித்தபோது என் மனத்தில் ஒரு பெரும் வியப்புத் தோன்றியது. ஆசிரியர் அவளைப்பற்றிக் கூறியிருப்பதோ வெகு கொஞ்சம். அப்படி இருந்தும் ஏதோ பக்கம் பக்கமாக எழுதி அவள் குணத்தை எடுத்துரைத்திருப்பது போன்ற பாவம் ஏற்படுகிறதல்லவா என்று வியந்தேன். சுமித்திரையின் சித்திரத்தை வரைவதற்குக் கவி அதிகப் பாடுபடவில்லை. ஆயினும் அவள் உருவம் என்றும் அழியாமல் நம் உள்ளத்தில் பதிந்துவிடுகிறது. சிற்சில வார்த்தைகளாலேயே அவள் மனப்பான்மை முழுவதும் நமக்கு மிகவும் தெளிவாக வெளியாகிறது. இத்தகைய சக்தி தெய்வப் புலமை வாய்ந்தவர்களுக்கல்லது வேறு யாருக்கு இருக்க முடியும்?

பாத்திரங்களின் குணகுணங்களை அவர்கள் சம்பாஷணை, நடவடிக்கை இவற்றின் மூலமாகவே வெளியிட்டு அவர்களை உயிர்பெற்றவர்களாகச் செய்வது நாடக ஆசிரியர்களுக்கே அமைந்த ஒரு தனி முறை. இந்த அற்புத சக்தியின் பெருமையை ஆங்கில மகாகவியாகிய ஷேக்ஸ்பியரின் நாடகங்களில் நாம் பெரிதும் காணலாம். ஆஸ் யூ லைக் இட் (As you like it) என்னும் நாடகத்தில் கதாநாயகியான ராஸலிண்டு யாவரையும்விட அதிகமாகப் பேசுகிறாள். வேடிக்கையும் விநோதமும் பொருந்திய அவள் மொழிகள் எப்போதும் சலசலவென்று இனிய சத்தமிட்டு ஓடிக்கொண்டிருக்கும் சிறிய மலை அருவியை

ஞாபகப்படுத்துவதாக இருக்கின்றன. அத்துடன் பெரும் கஷ்டங்களின் மத்தியிலும் சற்றும் வாட்டமுற்று ஓய்ந்து போகாத அவள் உற்சாக குணத்தையும் வெகு அழகாக இது எடுத்துக் காட்டுகிறதல்லவா? ஆனால் லீயர் (Lear) என்னும் நாடகத்தில் கார்டீலியா (Cordelia) என்னும் ராஜகுமாரியின் விஷயத்தில் கவி என்ன முறையைக் கையாளுகிறார்? ராஸலிண்டோடு ஒப்பிட்டுப் பார்த்தால் கார்டீலியாவை வெறும் ஊமை என்றே சொல்லிவிடலாம். அவள் அவ்வளவு குறைவாகவே பேசுகிறாள். ஆயினும் அந்தச் சில வார்த்தைகளில் பொய்யை அடியோடு வெறுக்கும் அவள் உயர்ந்த சுபாவமும், சகோதரிகள் வயது சென்ற தந்தையை வஞ்சிக்கும் அற்பத்தனத்தைக் கண்டு அவள் அடையும் வருத்தமும் கோபமும் எவ்வளவு தெளிவாகத் தெரிகின்றன!

அவ்வாறே ராமாயணத்தில் சுமித்திரையைப்பற்றி நினைக்கும்போது பரிசுத்தமும் அடக்கமும் நிறைந்த ஓர் இனிய வடிவம் நம் முன் தோன்றுகிறதென்றால் மிகையில்லை. ஆகாயத்தில் வெகு தூரத்தில் தெரியும் நக்ஷத்திரமானது உற்று நோக்கினால் அல்லது கண்களுக்குப் புலப்படுவது அரிதாயிருப்பதுபோல் சுமித்திரையின் சிறந்த குணமும் கவனித்துப் பார்த்த பிறகே நம் அறிவுக்கு எட்டுவது சாத்தியமாகிறது. ராமாயணம் முழுவதும் தேடிப் பார்த்தாலும், ராமருக்கு அடுத்தபடியாகப் பெரிய துன்பங்களின் மத்தியிலும் மனம் கலங்காது அமைதியாக இருந்தவர் வேறு யாரேனும் உண்டோவெனில் அது சுமித்திரையே என்று நாம் உறுதியாகக் கூறலாம்.

சுமித்திரையைப்பற்றிக் கூறும்போது பரதனுடைய தாயாகிய கைகேயியின் நினைவும் நமக்குக் கூடவே உண்டாவது சகஜம். அவ்விருவருடைய மனப்பான்மையையும் நாம் ஒப்பிட்டுப் பாராமல் இருக்க முடியாது. சுமித்திரை தசரதசக்கரவர்த்தியின் மூன்று பிரதானமகிஷி

களில் ஒருத்தி எனினும் அம்மூவருடைய நிலைமையிலும் ஏற்றத் தாழ்வு அதிகமாகவே தென்படுகிறது. தசரதனுடைய மூத்த மனைவி என்பதுடன் அனைவருடைய உள்ளங்களையும் கொள்ளைகொண்ட ஜேஷ்டபுத்திரன் ஸ்ரீராமனுடைய தாய் என்ற கௌரவம் கௌசல்யாதேவிக்குத் தானாகவே அமைந்திருக்கிறது. அதனுடன் வேறு பெருமை எதுவும் போட்டிபோட முடியாது. ஆனால் கடைசி மனைவியாகிய கைகேயியோ மற்ற இருவரிலும் இளையவள்; எழில் மிகுந்தவள்; வயது முதிர்ந்த அரசனுடைய எல்லையற்ற அன்புக்குப் பாத்திரமானவள். இதனால் அவளுக்கு ஏற்பட்ட செல்வாக்கு மிகவும் அதிகம். கைகேயியின் அத்தகைய செல்வாக்காவது கௌசல்யையின் இயற்கையாயுள்ள பெருமையாவது சுமித்திரைக்கு இல்லை. ஆயினும் அவைகளுக்குப் பதில் அவ்விருவருக்கும் இல்லாத ஒரு விவேகம் அவளிடம் நிறைந்து விளங்குகிறது. கைகேயியிடம் எவ்வளவு புத்தியின்மையும் பிடிவாதமும் தென்படுகின்றனவோ அதற்கு மாறாக அவ்வளவு அடக்கமும் அறிவும் அவளிடம் குடிகொண்டு விளங்குகின்றன. கடும் புயற்காற்றிலும் அலைகளின் கொந்தளிப்பை எதிர்த்துத் தாங்கி நிற்கும் அரிய மரக்கலம்போல் எத்தகைய கஷ்டத்திலும் அவள் உள்ளம் நிலைதடுமாறாமல் அமைதியும் தெளிவும் பெற்று விளங்குவது மிகவும் ஆச்சரியத்தையே அளிக்கிறது.

கைகேயி அல்லாமல் சுமித்திரையே பரதனுடைய தாய் என்று வைத்துக்கொள்வோம். அப்போது சுமித்திரை எவ்வாறு நடந்துகொண்டிருப்பாள்? கைகேயியின் மனத்தை மாற்றியதுபோல் மந்தரை அவள் மனத்தை மாற்றியிருக்க முடியுமா? அது ஒருபோதும் சாத்தியமல்ல என்றே நாம் கூறலாம்.

சுமித்திரை பரதனுடைய தாய் என்றிருந்தால் முதலில் ராமாயணக் கதை இவ்வளவு பெரிதாக வளர்ந்திருக்க முடியாது. ராமன், சீதை, லக்ஷ்மணன் இவர்க

ளுடன் பதினான்கு வருஷம் காட்டுக்குச் சென்று வசிப்பதும், ராவணன் சீதையைத் தூக்கிச் செல்வதும் முடிவில் ராமன் ராவணனைக் கொன்று சீதையை மீட்பதுமாகிய சம்பவங்களே நடக்க ஏதுவில்லை. ராமனைக் காட்டுக்கு அனுப்பிவிட்டுப் பரதன் ராஜ்யம் ஆளுவதற்கு உரிய காரணங்களை எடுத்துக் கூறி மந்தரை எவ்வளவு ஆசை காட்டியும் இணங்காமல் சுமித்திரை தன்னுடைய அறிவும் கனிவும் நிறைந்த வார்த்தைகளினால் மந்தரையின் மனத்தையே அடியோடு மாற்றிப் போகச்சொல்லியிருப்பாள் என்றுதான் நமக்குத் தோன்றுகிறது. கைகேயி பரதனுடைய மனப்பான்மையைச் சிறிதும் அறியாமல் தவறிழைத்ததுபோல் அவள் ஒருபோதும் செய்திருக்க மாட்டாள். சுருக்கமாக அவள் பரதனுடைய தாயாக மட்டும் இருந்திருந்தால் பொழுது விடிந்ததும் ராமனுக்குப் பட்டாபிஷேகம் என்று சகல ஜனங்களும் கொண்ட களிப்பானது ஒரு க்ஷணத்தில் ஒரே சோகமயமாக மாறுவதற்கு இடமில்லாமல் உத்தேசித்தபடியே தந்தையினால் முடிசூட்டப்பெற்று ராமன் சீதையுடன் சிம்மாசனத்தில் வீற்றிருப்பான். ஆனால் கதை அத்துடன் முடிந்திருக்கும்; மேலே வளருவதற்கு இல்லை. ராஜ்யத்துக்குப் பதிலாக வனவாசத்தைச் சந்தோஷத்துடன் ஏற்றுக்கொண்ட ராமனுடைய தியாகத்தின் பெருமையை உணர்ந்து அநுபவிக்கும் பாக்கியமும் நமக்குக் கிட்டியிருக்காது.

வால்மீகி சுமித்திரையைப்பற்றிக் கூறும்போது 'தத்துவதர்சினி'—உண்மையை உணர்ந்தவள் என்று சொல்லுகிறார். அதைவிட அவள் இயல்புக்குப் பொருத்தமாக அமைந்த பெயர் வேறு இருக்க முடியாது. மற்ற மாந்தர்கள் இயற்கையான உணர்ச்சிகளைப் பின்பற்றக்கூடிய சமயங்களிலும் அவளிடம் விவேகமே தலை சிறந்து விளங்குகிறதல்லவா? இல்லாவிட்டால் தன் அருமை மைந்தனுயிற்றே என்றுகூடப் பாராமல் தைரியமாக, 'ராமனுடன் வனத்துக்குச் செல்'

என்று ஒரு தாய் கட்டளையிடுவதை எங்காவது நாம் காண முடியுமா? லக்ஷ்மணன் தன்னை நமஸ்கரித்து விடை பெற்றுக்கொள்ளும்போது அவள் என்ன சொல்லுகிருள்.

“அப்பா, நீ வனவாசத்துக்கென்றே பிறந்துவிட்டாய். உன் தமையனுகிய ராமன் காட்டுக்குச் செல்லும்போது நீ பேசாமல் இருக்கலாகாது. கஷ்டத்திலும் சுகத்திலும் நீ உன் தமையனைப் பின்பற்றி நடப்பதே சிறந்த வழி என்று நினைக்கிறேன். இதுதான் சூரிய வம்சத்தில் உதித்தவனும் நேர்வழியில் நடப்பவனுமான உனக்குத் தகுந்தது. லக்ஷ்மணு, ராமனை உன் தந்தையாகப் பாவித்து நடப்பாய். சீதையை உன் தாயாகவும் வனத்தையே அயோத்தியாகவும் கருதுவாய். தாமதிக்காதே! உடனே சென்றுவிடு.” இதுதான் பதினன்கு வருஷங்கள் கொடிய அரணியத்தில் வசிக்கப்போகும் தன் மகனுக்கு அவள் கடைசியாகக் கூறிய மொழிகள். இச்சொற்களில் விளங்கும் மன உறுதியும் தைரியமும் நம்மை மெய் சிலிர்க்கச் செய்கின்றன அல்லவா?

கைகேயி ராமனைத்தான் பதினன்கு வருஷம் காட்டுக்குச் சென்று வசிக்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டாளே ஒழிய லக்ஷ்மணனும் கூடச் செல்ல வேண்டுமென்று வற்புறுத்தவில்லை. அப்படி இருக்கும் போது ராமனைப் பின்பற்றிச் செல்லும்படி சுமித்திரை ஏன் லக்ஷ்மணனுக்குப் புத்திமதி கூற வேண்டும்? ஏனெனில் கைகேயி பரதனை அறியாதிருந்ததுபோல் அவள் லக்ஷ்மணனை அறியாதவள் அல்ல. ராமனை விட்டு லக்ஷ்மணன் அரைக்கணமும் பிரிந்திருக்கமாட்டான். அதைவிட வேறு எந்தக் கஷ்டமும் அவனுக்குப் பெரிதல்ல என்பதை அவள் நன்கு அறிவாள். ஆகவே எவ்வளவுதான் அவன் தன் மைந்தனென்றும் தான் அவனைப் பெற்ற தாயென்றும் இருந்தபோதிலும் ராமனைப் பின்பற்றிச் செல்ல வேண்டும் என்ற உயர்ந்த தீர்மானத்

தினின்றும் அவன் மனத்தை மாற்ற அவள் கனவிலும் கருத மாட்டாளென்பது நிச்சயம். தர்மத்துக்கு முன் மற்றெதுவும் பெரிதல்ல என்பதே அவள் கொள்கை.

மானிடர்களுக்கு இயற்கையாக உள்ள பாசங்கள் அனைத்தும் அறவே ஒழிந்து உத்தமமான ஒரு சாந்த நிலையைப் பெற்றவள் சுமித்திரை. இந்த மனப்பான்மையே துன்பத்தின் மத்தியில் மற்ற எவருக்கும் கிட்டாத மனோதைரியத்தை அளித்து அவளை மேன்மையாக்கியிருக்கிறது. தன்னுடைய தெளிந்த அறிவின் பயனால் ராமனுடைய உயர்வையும் குணாதிசயங்களையும் அவள் கண்டறிந்ததுபோல் கௌசல்யைகூட அறிந்தவள் அல்ல என்று நாம் கூறலாம். மைந்தனின் பிரிவை நினைத்துப் புலம்பும் கௌசல்யை முன் அவள் எப்படித் தோன்றுகிறாள், பாருங்கள்!

"அம்மணி! நீங்கள் எதற்காக வருத்தப்படுகிறீர்கள்? சகல நற்குணங்களும் நிரம்பிய தங்கள் புத்திரன் புருஷ சிரேஷ்டன். அவன் ராஜ்யத்தைத் துறந்து வனவாசத்தை ஏற்றுச் செல்வது பிதாவைச் சத்தியத்தினின்றும் தவறாமல் காப்பதற்கே அல்லவா? கவலையை ஒழியுங்கள். மகா வீரனாகிய ராமன் அரண்மனையில் இருப்பதுபோல் வனத்திலும் சுகமாக வசிப்பான். பதினான்கு வருஷங்களுக்குப் பிறகு சீதை, லக்ஷ்மணன் இவர்களுடன் அவன் திரும்பி வந்து உங்களை நமஸ்கரிப்பானென்பது நிச்சயம்."

இந்த மொழிகள் கைகேயியின்மீதுள்ள ஆசையினால் அறிவிழந்தவன் என்ற அபவாதத்துக்கு ஆளாக்காமல் தசரதனைக்கூட எவ்வாறு உயர்த்துகின்றன! 'ராமன் தந்தை சொல்லைக் காப்பதற்கல்லவா காட்டுக்குச் செல்லுகிறான்?' என்ற சிறு வாக்கியம் ஒன்றே அவள் விவேகத்தை வெளியாக்குவதுடன் பதியின்மேலுள்ள அவள் குன்றாத பக்தியையும் சோக வெள்ளத்தில் ஆழ்ந்து கிடக்கும் அரசனைக் கடுஞ்சொற்களால் மேன்மேலும் துன்புறுத்தலாகாதெனக் கௌசல்யைக்கு அவள் இங்கித

மாக உணர்த்துவதையும் மிகவும் நன்ருக எடுத்துக் காட்டுகிறது.

கைகேயியைப்பற்றி அவள் ஒரு கடுஞ்சொல்லும் கூருமல் இருப்பதும் கவனிக்கத்தக்கதே! இந்த விஷயத்தில் ராமனைக்கூடத் தோஷமற்றவன் என்று நாம் கூற முடியாது. ஏனெனில் சீதை அபகரிக்கப்பட்டதும் தன் மன உறுதியெல்லாம் குலேந்துபோய் ராமனும், "அம்மா கைகேயி, நீ விரும்பியதெல்லாம் நிறைவேறிவிட்டது!" என்று புலம்புகிருன் அல்லவா?

புத்தியின்மையினுல் ராஜ்ய மோகத்தில் ஆழ்ந்து மீளாப் பழியைச் சம்பாதித்துக்கொண்டவள் கைகேயி. சுமித்திரையோ தன்னலம் கருதாத சிறந்த விவேகத்தைக் கைப்பற்றியதால் அழியாத புகழைப் பெற்றவள். இவ்வுத்தமி ராமாயணத்தில் முக்கியமான பாத்திரமாக இல்லாமலிருந்தும் என்றும் மறக்க முடியாதபடி நம் உள்ளத்தில் பதிந்துவிடக்கூடிய தன்மை வாய்ந்தவள் என்பதில் ஒரு சந்தேகமும் இல்லை.

# கடவுளிடம் நம்பிக்கை

சில வருஷங்களுக்கு முன் மேன்மையும் புகழும் பெற்ற ஒரு பெரியாரின் அரிய பிரசங்கத்தைக் கேட்கும் சந்தர்ப்பம் வாய்த்தது. அவர் பேசியதை அன்றுதான் முதல் முதலாகக் கேட்டேன். சரியாக நாற்பத்தைந்து நிமிஷங்கள்தான் பேசினர். ஒருநிமிஷம் அதிகமுமில்லை, குறைவும் இல்லை. விஷயம் தத்துவ விசாரத்தையும் மதப்பற்றையும் பற்றியது. ஆரம்பிக்கும்போது என்ன வேகத்துடன் தொடங்கினரோ அதே வேகத்துடன் பேசி முடித்தார். பேச்சில் இடையே ஏதேனும் தங்கு தடை இருக்கவேண்டுமே? இல்லை. எண்ணங்களுக்கோ வார்த்தைகளுக்கோ தாமதிக்கவும் இல்லை; யோசிக்கவும் இல்லை. ஓர் அருவிபோன்ற அவர் சொற்பொழிவு கேட்பவர்களின் செவிகளில் ஒரேநிதானமாக விழுந்துகொண்டிருந்தது. அந்த முக்கால்மணி நேரத்தில் அவர் தம் உயர்ந்த அறிவுக்கு எட்டிய விஷயங்களையும் ஆராய்ச்சிகளையும் எடுத்துக் கூறினர். வியப்புடன் கேட்டுக்கொண்டிருந்த எனக்கு, தாம் சொன்ன ஒரு விஷயத்தை விளக்கும்பொருட்டு அவர் உதாரணமாகக் கூறிய கதை ஒன்றுதான் யாவற்றையும் விட நன்றாக மனத்தில் பதிந்தது.

நடுக்கடலில் கடும் புயற்காற்றில் அகப்பட்டுக் கொண்டு ஒரு கப்பல் தத்தளித்தது. அது முழுகிப் போகாவண்ணம் காப்பாற்ற அதன் தலைவன் மிகவும் பாடுபட்டான். ஒன்றும் பயனில்லை. கடைசியில் கடவுளின்மீது பாரத்தைப் போட்டுவிட்டுப் பேசாமல் இருந்துவிட்டான். அந்தச் சமயத்தில் பாதிரி

ஒருவர் கப்பல் தலைவனிடம் சென்று ஆபத்தைத் தடுக்கும் வழி பற்றி விசாரித்தார்.

"மனிதன் செய்யக் கூடியதெல்லாம் செய்தாயிற்று. இனிமேல் கடவுள்தான் கதி. அவர்தாம் காப்பாற்ற வேண்டும்" என்ருன் தலைவன்.

"அடாடா! அந்த நிலைமைக்கு வந்துவிட்டதா?" என்று பரிதபித்தார் பாதிரியார்.

இது வேடிக்கையாகக் கூறப்பட்ட கதைதான். இதனுல் ஒரு தேசத்தாரின் மனப்பான்மையை நாம் நிர்ணயித்துவிட முடியாது. ஆயினும் கதையை நினைத்துப் பார்க்கப் பார்க்க அதிலுள்ள நகைச்சுவை மட்டும் அல்ல, வேறு பல விஷயங்களும் புலப்படுகின்றன. 'அடாடா! அந்த நிலைமைக்கு வந்துவிட்டதா?' என்று பாதிரியார் கூறும்போது அவர் மனத்தின் நிலைமை நமக்கு நன்ருக விளங்குகிறது. உயிருக்கு ஆபத்து என்றதும் அவர் தம்மை முற்றும் மறந்துவிட்டார். கடவுளைப்பற்றி உபதேசிக்கும் ஒருவர் அத்தகைய சந்தர்ப்பத்தில் அவ்வாறு கூறுவதென்ருல் அது ஹாஸ்யமாகத்தான் தோன்றும் அல்லவா? அதற்குப் பதிலாக அவர், 'ஆம், இறைவனைக் குறித்துப் பிரார்த்தனை செய்வோம். அவர் காப்பாற்றுவார்' என்றல்லவா சொல்லவேண்டும்! வேறு எவ்விதமான சொற்கள் அவர் வாயிலிருந்து வந்தால் அச்சமயம் பொருத்தமாயிருக்கும்?

சாதாரண நாட்களில் கடவுளைப்பற்றியும் அவர் அருளைப்பற்றியும் எவ்வளவோ ஆவேசத்துடன் அவர் ஜனங்களுக்கு எடுத்துரைத்து நம்பிக்கையும் உற்சாகமும் ஊட்டியிருப்பார். ஆனுல் எந்தச் சமயத்தில் தம் நம்பிக்கையைக் காட்ட வேண்டுமோ அந்தச் சமயத்தில் தான் அவர் தம் உண்மையான மன நிலைமையை வெளியிட்டார். கடவுளைப்பற்றி அதிகம் சிந்தித்திராத கப்பல்

தலைவனே அவரைக் காட்டிலும் தெய்வ உணர்ச்சி மேலிட்டவனாகத் தோன்றுகிறான்.

கடவுளே கதி என்ற நம்பிக்கையும் நிம்மதியும் பூண்டவர்களின் மனம் மிக எளியது; வலியற்றது. தன்னைத்தானே காத்துக்கொள்ளும் சக்தி அதற்கு இருக்காது என்று தனது ஆற்றலையே பெரிதாக நம்பிய மனிதன் இறுமாப்படைகிறான். ஆனால் அவ்வெளிய மனத்துக்குத்தான் ஆறுதலும் அமைதியும் ஏற்படுகின்றன என்பதில் சந்தேகம் உண்டா?

கடவுளிடம் பக்தியும் நம்பிக்கையும் வெளித் தோற்றங்களிலிருந்து அறிந்துகொள்ளக் கூடியவை அல்ல; அவைகள் உள்ளத்தின் உணர்ச்சிகள். இருதயத்தில் அவை வேரூன்றியிருக்க வேண்டும். பகவானின் பேராற்றலின் முன் தன் சிறுமையை மனிதன் உணரும் போதுதான் அகங்காரத்தை ஒழித்து முற்றும் அவரையே சரணமாக அடைய முடிகிறது. "வேறு நினைவில்லாமல் என்னையே யார் உபாசிக்கிறார்களோ, அவர்களுடைய யோக க்ஷேமத்தை நான் பார்த்துக்கொள்ளுகிறேன்" என்று பகவான் கீதையில் கூறுகிறார்.

தெய்வத்தினிடம் தன்னை ஒப்பிப்பதென்றால் ஒரு செயலும் இல்லாமல் சும்மா உட்கார்ந்திருப்பது என்று அர்த்தமல்ல. தன்னால் இயன்றதைச் செய்துவிட்டுப் பிறகு கடவுள் செயல் என்ற விவேகத்துடன் இருப்பதே அதன் தாத்பர்யம். அத்தகைய அறிவும் அடக்கமும் உள்ளவன் பெரிய துன்பங்களின் மத்தியிலும் மனம் கலங்காமல் அமைதியுடன் இருப்பான். 'கடவுள் ஒருவர் உண்டு; அவரன்றி ஓர் அணுவும் அசையாது' என்ற நம்பிக்கை உள்ளவனுக்குத்தான் திடசித்தமும் ஏற்படுகிறது. அவன்தான் எவ்வளவு பெரிய கஷ்டங்களையும் சந்தோஷத்துடன் ஏற்றுக்கொண்டு உலகுக்கு நன்மை தரும் காரியங்களையே செய்யும் திருஷ்டியுள்ளவனாக இருப்பான்.

இதர தேசங்கள் யாவற்றையும்விடத் தெய்வ உணர்ச்சி மிகுந்தது இந்தத் தேசம். மற்ற நாடுகளில் அறிவு மிகத் தாழ்ந்த நிலையில் இருக்கும்போதே அது இங்கே வெகு தூரம் முன் சென்று எவ்வளவோ ஆழ்ந்த தத்துவங்களை ஆராய்ந்து வெளியிட்டுவிட்டது. குன்றாத மதப்பற்றும் தெய்வ உணர்ச்சியுமே இந்த நாட்டில் யாவற்றுக்கும் அடிப்படையாக விளங்குகின்றன என்று கூறலாம். மக்களின் மனோபாவமானது முற்றும் இவ்வுணர்ச்சிகளிலேயே வேரூன்றி இருக்கிறது. தோட்டியிலிருந்து தொண்டைமான்வரையில் அவ்வளவு ஜனங்களிடமும் பொதுவாகக் காணப்படுவது இந்த உணர்ச்சிகள் தாம்.

வெளிநாடுகளிலிருந்து வருஷந்தோறும் இந்தத் தேசத்தைப் பார்வையிட எவ்வளவோ பேர் வருகிறார்கள் அல்லவா? அவர்களுக்கு மிக விசேஷமாகத் தோன்றுவது ஜனங்களிடம் காணப்படும் இந்தத் தெய்வ பக்திதான். நாட்டின் அருங்கலைகள் யாவும் இந்தத் தெய்வ வழிபாட்டையே ஆதாரமாகக் கொண்டுள்ளன என்பது ஒவ்வொன்றிலும் தெரியவரும். அபூர்வமான சிற்ப வேலைகளைக் கடவுளின் கோயில்களில்தான் காணலாம். மேன்மையான சங்கீதம் என்றால் அது பகவானைக் குறித்து உள்ளம் உருகிப் பாடிய பாடல்களாகவே இருக்கும். ஆழ்வார்களும் நாயன்மார்களும் பக்தி உணர்ச்சியில் ஈடுபட்டுத்தான் பாடினார்கள். எனினும் அவர்கள் பாடல்களில் கவிதையும் கற்பனா சக்தியும் இல்லையென்று கூற முடியுமா?

உலக மகா காவியமாகப் போற்றப்படுவது வால்மீகி ராமாயணம். ஆனால் அதன் காவியச் சிறப்புக்காகவா நாட்டில் கோடிக்கணக்கான ஜனங்கள் அதைத் தினந்தோறும் போற்றி வருகிறார்கள்? அவர்கள் நல்வழி அடைவதற்குரிய சிறந்த சாதனமாக அது விளங்குகிறது என்பதற்கே அல்லவா? இவ்வாறு தீவிரமான ஒரு

தெய்வ உணர்ச்சி எவ்வளவோ காலமாக மக்களின் ரத்தத்தில் ஊறி வந்திருப்பதனால்தான் அப்போதைக் கப்போது சிறந்த மகான்கள் நாட்டில் தோன்றுவதும் சாத்தியமாயிற்று. அவர்கள் தங்கள் புனித வாழ்க்கை யினால் ஜனங்களின் உள்ளத்தில் சாந்தியும் தியாக உணர்ச்சியும் எழும்படி செய்கிறார்கள். 'நான் ஓர் அரசியல்வாதியாகத் தோன்றினாலும் அந்தரங்கத்தில் தெய்வ உணர்ச்சி மேலிட்டவனே!' என்கிறார் மகாத்மா காந்தி. அவருடைய வாழ்க்கையும் செயல்களும் அவ் வார்த்தையை எவ்வளவு தூரம் மெய்ப்பிக்கின்றன?

'தெய்வ உணர்ச்சி செயலுக்கு விரோதம்; அதனால் ஒரு வறட்டு வேதாந்தம் தோன்றி மக்களைக் கையா லாகாதவர்களாக்குகிறது' என்பது அநேகர் கொள்கை. அது சரியல்ல. உண்மையான தெய்வ உணர்ச்சியே பெரிய காரியங்களில் நம்மை ஈடுபடச் செய்யும்.

'கடவுளை நீர் கண்டதுண்டா?' என்று கேட்ட இளைஞருக்குச் சிறிதும் தயங்காமல், "ஆம், கண்டிருக் கிறேன். எதிரிலிருக்கும் உன்னைவிட இன்னும் நன்றாக நான் அவரைக் காண்கிறேன்" என்றார் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர். இந்த மொழிகளைக் கூறியவர் நெஞ்சம் எவ்வளவு தீரம் பொருந்தியதாக இருக்கவேண் டும்! அந்தப் புண்ணிய புருஷரது அருளால் அல்லவா ஸ்ரீ விவேகானந்தர் தோன்றினார். அவருடைய பிரபா வத்தினாலேயே இந்துமதத்தின் பெருமையை விவே கானந்தர் உலகெங்கும் கோஷிக்கச் செய்வதும் முடிந் தது. அவர் பேசிய கம்பீர மொழிகள் எத்தகைய வீராவேசத்தைக் கிளப்பக்கூடியன! இதனால் என்ன ஏற்படுகிறது? உண்மை மதப்பற்று மனிதனை ஒரு போதும் துர்ப்பலமாக்குவதில்லை; அது அவனை எதற் கும் அஞ்சாமல் சத்தியத்தையே பின்பற்றச் செய்யும், திடசித்தமுடையவனாகச் செய்யும் என்று ஏற்படுகிற தல்லவா?

# 14

## மிகைபடக் கூறல்

உள்ளது உள்ளபடி, நடந்தது நடந்தபடி கூறுமல் சமயத்துக்கு ஏற்றபடி மாற்றியோ மறைத்தோ கூறுவது சில மனிதர்களின் இயல்பு. இவர்களை நாம் பொய் சொல்லுகிறவர்கள் என்று இகழுகின்றோம். தனக்கு ஒரு கெடுதியோ இழிவோ நேரிடுவதாக இருந்தால் அப்போது தன்னை அதனின்றும் காப்பாற்றிக் கொள்ளும் பொருட்டு மனிதன் பொய் சொல்லுகிறுன். அவ்விதமே தனக்கு வேண்டாதவர்களுக்கு ஏதேனும் தீங்கு அல்லது அவமானம் விளைவதாக இருந்தால் அப்போதும் உண்மையை மாற்றிப் பேசுவதற்கு அவன் அஞ்சுவதில்லை. ஆனுல் மேற்கூறிய விதம் பொய் சொல்லுகிறவர்கள் என்று இல்லாவிட்டாலும் பெரும் பான்மையோர் உள்ளதை உள்ளபடியே கூறுமல் தம் சொந்தக் கற்பனைக்கு இடமளித்துக் கூறுபவர்களாக இருப்பார்கள். இவர்களைத்தான் நாம் மிகைபடுத்திப் பேசுகிறவர்கள் என்று சொல்லுகிறோம். ஆனுல் இவர்களால் யாருக்கும் ஒரு தீங்கும் நேருவதில்லை. ஆகவே இவர்களைத் தவறுக ஒருவரும் கருதுவதில்லை. நம்மில் அநேகர் இவ்வியல்பு உடையவர்களாக இருப்பதற்கு, பேச்சில் அவர்களுக்குள்ள பெரும் ஆர்வமே காரணம் என்று சொல்லிவிடலாம். நடந்தது நடந்தபடிதான் கூறவேண்டும்; கூட்டியோ குறைத்தோ கூறக்கூடாது என்பது போன்ற விதியை நியாய விசாரணை செய்யும் நீதி ஸ்தலத்தில்தான் அநுசரிக்க முடியும். அங்கேதான் நாம் பேசும் ஒவ்வொரு வார்த்தையையும் எண்ணி ஆராய்ந்து பேசவேண்டும். இல்லாவிட்டால் உண்மை துலங்குவது கடினமாகிவிடும். ஆனுல் சாதாரணப்

பேச்சில் அவ்வாறு எண்ணி எண்ணிப் பேசுவது சாத்தியமா? எவ்வளவோ சமயங்களில் நம்மை அறியாமலே மிகைபடுத்திப் பேசிவிடுகிறோம். அப்படிச் சகஜமாகப் பேசுவதாலேயே சில சமயம் மிகைபடுத்திப் பேசுவது கூடப் பொருத்தமாகவே தோன்றுகிறது.

உதாரணமாக, 'பசி பிராணன் போய்விட்டது' என்றோ, 'சிரித்துச் சிரித்து வயிறு வெடித்துவிட்டது' என்றோ சொன்னால் அச்சொற்கள் நமக்கு மிகையாகத் தோன்றுகின்றனவா? பசியினால் பிராணன் போகாமல் இருக்கும்போதும் சிரித்து வயிறு வெடிக்காமல் இருக்கும்போதும் அவ்வாறு நேர்ந்துவிட்டதாகக் கூறுவது சரியா என்று யாரும் யோசிப்பதில்லை. உண்மையில் அப்படிச் சொல்லும்போதுதான் அவர்கள் உண்மை நிலைமையை நாம் சரியாக உணருகிறோம். "ஐயோ பாவம்! அவ்வளவு பசியா!" என்று அநுதாபப்படுகிறோம். "அப்படியா? அவ்வளவு தமாஷாக இருந்ததா!" என்று கேட்டுச் சந்தோஷப்படுகிறோம். அவ்வாறு இல்லாமல் 'எனக்கு ரொம்பப் பசியாக இருக்கிறது' என்றுமட்டும் ஒருவர் சொன்னால் நம் மனத்தில் அது அவ்வளவு நன்றாகப் படுமா? இப்படித்தான் எவ்வளவோ சந்தர்ப்பங்களில் உண்மையை மிகைபடுத்திக் கூறுவதே சரி என்று சொல்லும்படி தோன்றுகிறது.

தன் உடம்பு ஸ்திதியைப்பற்றி விசாரிக்கும் நண்பரிடம் ஒருவர், "ரொம்பக் கிடந்தேன். செத்துப் பிழைத்தேன் ஸார்" என்று சொல்லுகிறார் என்று வைத்துக்கொள்ளுவோம். "செத்துப் பிழைப்பதா? இதென்ன அதிசயம்!" என்று யாராவது ஆச்சரியப்படுகிறார்களா?

'செத்துப் பிழைத்தேன்' என்ற சொற்களால் தான் அவ்வளவு கவலைப்படும்படியான நிலைமை என்று நாம் அறிந்துகொள்ளுகிறோம். இரண்டும் இரண்டும் நாலு என்பதுபோல் கணக்காகத்தான் பேசவேண்டும்

என்ருல் பிறகு நாம் பேசும் மொழியின் சிறப்புக்கும் நம் கற்பனைத் திறமைக்கும் இடம் எங்கே?

மிகைபடுத்திக் கூறுவதில் எவ்வளவோ சௌகரியங்கள் உண்டு. உதாரணமாக விளம்பரங்களை எடுத்துக் கொண்டு பார்ப்போம். சொற்களில் சிக்கனத்தைக் கையாண்டால் அப்புறம் அது விளம்பரம் ஆகுமா? வியாபாரத்தின் நோக்கந்தான் நிறைவேறுமா? விளம்பரத்தின் பெருமையே மிகைபடக் கூறும் சாமர்த்தியத்தில் அல்லவா இருக்கிறது!

'ஸினிமாக் கலையின் மகத்தான வெற்றி; கண்களையும் மனத்தையும் கவரும் இணையற்ற அற்புதமான சிருஷ்டி' என்ற விளம்பரத்தைக் கண்டால் இதற்குமுன் எவ்வளவு ஏமாற்றம் அடைந்திருந்தபோதிலும் கொஞ்சம் பிரமை தட்டத்தான் தட்டுகிறதல்லவா? மற்ருெரு விளம்பரம், 'நரை, வழுக்கை மறைந்து உங்கள் கூந்தல் குதிகால் வரையிலும் நீண்டு பளபளவென்று அடர்த்தியாக வளரவேண்டுமாஞல் உடனே எங்கள் அளகவர்த்தினியை வாங்கி உபயோகியுங்கள்' என்று நமக்கு ஆசை காட்டுகிறது. வாங்குவோரின் கவனத்தைக் கவரும் பொருட்டே என்ருலும் 'கூந்தல் குதிகால் வரையிலும் நீண்டு வளரும்' என்று உறுதி கூறுவது மிகைதான் அல்லவா?

இலக்கியத்தில் மிகைபடுத்திக் கூறுவது யாவற்றையும்விட இன்னும் சகஜமாகவே காணப்படுகிறது. மகாகவிகள் இதைச் சர்வ சாதாரணமாகக் கையாளுகிருர்கள். ஆனல் அவர்கள் மிகைபடுத்திக் கூறும்போது அதில் ஒரு தனி இலக்கியச் சிறப்பையும் பெருமையையும் நாம் உணர்ந்து அநுபவிக்கிருேம். ஏனெனில் வெறும் சொற்களாக இராமல் அவைகள் எவ்வளவோ அழகும் அர்த்த புஷ்டியும் நிரம்பியனவாக இருப்பதுதான் காரணம். இப்போது மகாகவி ஷேக்ஸ்பியரை எடுத்துக்கொள்வோம். மக்பத் என்னும் நாடகத்தில்,

மக்பத்பேராசைப்பேயினுல் தூண்டப்பட்டு மனைவியின் போதனையின் பேரில் தங்கள் வீட்டில் தங்கியிருந்த டங்கன் என்னும் அரசனைத் தூங்கிக்கொண்டிருக்கும்போது நடு இரவில் அவன் படுக்கை அறையில் புகுந்து கொன்று விடுகிருன். ஆனுல் அவன் புரிந்த தீச்செயல் அவன் மனத்தைச் சதா வாட்டித் துன்புறுத்திக்கொண்டிருக்கிறது. 'ஐயோ! கடல்நீர் முழுவதையும் கொண்டு கழுவினுலும் இந்தக் கையில் படிந்துள்ள கறை நீங்கிச் சுத்தமாகுமா? அதற்குப் பதிலாகக் கடல் முழுவதும் அன்ருே ரத்தமாகச் சிவந்து விடும்போல் தோன்றுகிறது!' என்று பரிதவிக்கிருன். இங்கே மக்பத் மிகைபடுத்திப் பேசுகிருன் என்பதை யாரும் மறுக்க முடியாது. ஆனுல் அவன் எவ்வளவு கூறினுலும் அவன் செய்த பெருங் குற்றத்தை அது ஒருபோதும் மிகைபடுத்தியதாகாது என்றுதான் தோன்றுகிறது. தான் புரிந்த மகா பாதகச் செயலை நினைத்து நினைத்து அவன் உள்ளம் அடையும் துன்பத்தையும் திகிலையும் அம்மொழிகள்தாம் எவ்வளவு நன்ருக நமக்கு உணர்த்துகின்றன! அதே நாடகத்தில் மக்பத்தின் மனைவியும் ஓரிடத்தில் இதே ரீதியில் பேசுகிருள்:

'ஆகா! அந்த ரத்தத்தின் நாற்றம் இன்னும் கையைவிட்டு அகலவில்லையே! அரபி தேசத்து உயர்ந்த வாசனைகளை எல்லாம் கொண்டுவந்து பூசினுலும் அந்த நாற்றம் போகுமா!' என்று ஏங்குகிருள். கேவலம் ஒரு ரத்தக் கறையின் நாற்றத்தைப் போக்குவது அவ்வளவு கடினமா? அவள் குற்றமுள்ள நெஞ்சு அல்லவா அவ்வாறு அவளை மிகைபடுத்திப் பேசும்படி செய்கிறது! ஆனுல் அவள் அப்படிப் பேசும்போதுதான் அவள் செய்த குற்றம் எவ்வளவு பயங்கரமானது என்பது நமக்குப் புலப்படுகிறது. அப்படி அங்கங்கே மிகைபடுத்திக் கூறும் சாதாரண முறையை ஷேக்ஸ்பியர் கையாண்ட போதிலும் அதில் ததும்பி நிற்கும் இலக்கியச் சுவை நம் மனத்தைக் கவர்ந்துவிடுகிறது.

'ஹாம்லெட்' நாடகத்தில் இறந்துபோன ஒபீலியாவின் உடலை அடக்கம் செய்யும்போது தற்செயலாக அங்கே வந்து சேர்ந்த ஹாம்லெட் பேசுவதைக் கேளுங்கள்: 'ஒபீலியாவை நான் காதலித்தேன். நாற்பதினாயிரம் சகோதரர்களின் அன்பும் என் காதலுக்கு ஈடாகாது' என்று தன் காதலை அவன் மிகைபடுத்திக் கூறுகிருன். ஆயினும் அவன் அவ்வாறு கூறுவதுதான் உண்மையில் ஒபீலியாவின்மேல் அவன் கொண்டிருந்த அளவற்ற காதலையும், அச்சமயம் அவன் உள்ளத்தில் எழுந்த சோகம், தயை, பச்சாத்தாபம் முதலிய உணர்ச்சிகளையும் நன்ருக வெளியிடுகின்றன. இல்லாவிட்டால், 'அவளை என் உயிரினும் மேலாக நேசித்தேன்' என்ற ரீதியில் எவ்வளவு கூறினுலும் அது சாதாரணமாகத் தான் தோன்றும் அல்லவா? உட்புகுந்து பார்த்தால் வால்மீகி ராமாயணத்திலும் இவ்வாறு மிகைபடுத்திக் கூறும் இடங்களைக் காணலாம். வால்மீகியை ஆழ்ந்து ரசிக்கும் பெரியார் ஒருவர் ஒரு சமயம் என்னிடம், 'லக்ஷ்மணனுக்குச் சீதையிடமுள்ள பக்தி எத்தன்மையது என்பது எல்லோருக்கும் தெரியும். அப்படியிருக்க, ராவணன் தூக்கிச்செல்லும்போது சீதை எறிந்துவிட்டுப் போன ஆபரணங்களைக் காட்டிக் கண்ணீர் பெருக ராமன், 'லக்ஷ்மணு, இவை சீதையின் ஆபரணங்கள் அல்லவா?' என்று கேட்டபோது லக்ஷ்மணன் பதில் கூறுவது கொஞ்சம் மிகையாகவே தோன்றவில்லையா?'' என்று கேட்டார். ஆம். லக்ஷ்மணன் கூறியது என்ன? ''கேயூரங்களை நான் அறியேன். குண்டலங்களையும் நான் அறியேன். நித்தியம் பாதங்களை வணங்குவதால் அப்பாதங்களில் அணிந்திருந்த நூபுரங்களை வேண்டுமானுல் அறிவேன்'' என்கிருன். சாதாரணமாகப் பார்ப்பதற்கு வால்மீகி லக்ஷ்மணன் பக்தியை மிகைபடுத்திக் கூறியதாகத்தான் தோன்றும். உண்மையில் அது மிகையாகவும் இருக்கலாம். ஆயினும் அவன் அப்படிக் கூறுவது நம் உள்ளத்தில் எத்தனைவித உணர்ச்சிகளை

எழுப்புகிறது! இத்தகைய உத்தமனை அல்லவா சீதை அவ்வளவு கடுமையான மொழிகளைக் கூறி மனம் புண்ணாகும்படி செய்தாள் என்று நினைத்துச் சீதையின் மீது நமக்குக் கோபமும் உண்டாகிறது. லக்ஷ்மணனைப் பற்றியோ நம் மனம் இன்னும் அதிகமாக இளகுகிறது.

சம்ஸ்கிருதத்தில் மிகைபடுத்திக் கூறுவது வெகு சகஜம். அது அவர்களுக்குத் தண்ணீர் பட்ட பாடாகவே இருக்கும். ஒருநங்கையின் ரூபத்தை வருணிக்கும்போது கவிகள் சற்றும் கவலை இல்லாமல் முறையைப் பின்பற்றுவார்கள். காதலன் காதலியைப் பார்த்து, "ஆகா, உன் அழகைக் கண்டு வெட்கி அல்லவா சந்திரன் மேகங்களுக்கு இடையில் ஓடி ஒளிந்துகொள்கிறான்!" என்று வியந்து பேசுவான். மிகைபடுத்திக் கூறுவதிலும் சாதுரியமாகக் கூறுபவர்கள் சிலர். ஒரு கவி அழகி ஒருத்தியை நோக்கிச் சொல்லுகிறான். "அழகிய பெண்ணே! சீக்கிரம் உள்ளே போய்விடு. வெளியில் நிற்காதே. சந்திரனைக் கிரகணம் பிடிக்கப்போகிறது. இந்தச் சமயம் நீ வெளியில் நின்றால் களங்கமற்ற உன் முகத்தைக் கண்டு சந்திரனைவிட்டு ராகு உன் மதிமுகத்தைப் பற்றிக்கொண்டு விடுவான்" என்கிறான். இது மட்டும் அல்ல; சம்ஸ்கிருத கவிகள் கற்பனைச் சிறகைக் கட்டிக்கொண்டு வான வெளியில் இஷ்டம்போல் எங்கே வேண்டுமானாலும் சஞ்சரிக்கத் தயங்குவதில்லை. "நாயகன் ஊருக்குப் போய்வருவதாகச் சொன்னதைக் கேட்டுச் சோக மிகுதியால் நாயகியின் உடல் வாடி மெலிந்ததும், அவள் கைகளிலிருந்த வளையல்கள் அப்படியே நழுவிக் கீழேவிழுந்தன. அதைக்கண்டுபயந்து கணவன், 'இல்லை, நான் போகவில்லை' என்றதுமே ஆனந்த மிகுதியினால் பூரித்த மனைவியின் கைகளில் எஞ்சயிருந்த வளைகள் பட்டென்று வெடித்து விழுந்தன" என்று ஒரு கவி வருணிக்கிறார். பார்த்தீர்களா, எப்படி இருக்கிறது கற்பனை!

காளிதாசன்கூட இந்துமதி சுயம்வரத்தில் ஓர் அரசனை வருணிக்கும்போது, "இவ்வரசனின் அந்தப்புரத்து ஸ்திரீகள் மார்பில் அணியும் சந்தனம் அவர்கள் ஸ்நானம் செய்யும்போது கரைந்து நீரில் கலப்பதால் மதுரையிலேயே யமுனை கங்காநதியுடன் கலந்துவிட்டதோ என்று தோன்றுகிறது" என்று கூறுகிறான். மிகைபடுத்திக் கூறுவதையும் எவ்வளவு ரசமாக்க முடியும் என்பதற்கு மேற்கூறிய வருணனையை உதாரணமாகக் கொள்ளலாம்.

விஷயம் மிகவும் உயர்வாக இருக்கும்போது, வேண்டும் என்று கவிகள் எவ்வளவு கூறினாலும் அது நமக்கு மிகையாகத் தோன்றுவதில்லை. "குழல்இனிது யாழ்இனிது என்பதம் மக்கள், மழலைச்சொல் கேளாதவர்" என்கிறார் திருவள்ளுவர். ஆம்; சின்னஞ் சிறு குழந்தைகளின் மழலை மொழிகளைக் கேட்கும் போது நாம் அடையும் இன்பம் இவ்வளவு என்று கூற முடியுமா? அவ்வினிமைக்கு யாழ், குழல் ஒன்றும் ஈடாகாது என்று தோன்றுவதில் என்ன ஆச்சரியம்?

"புகழ்பெற்ற சூரிய வம்சம் எங்கே? என் சிற்றறிவு எங்கே? கடக்க முடியாத கடலை அறிவின்மையால் சிறுபடகைக்கொண்டு கடக்கமுயலுவதுபோல் அன்றோ இருக்கிறது என் செய்கை!" என்கிறான் காளிதாசன். அவன் அவையடக்கம் மிகவும் பொருத்தமாக இருப்பதுடன் ரகுவம்சத்தைப் பெருங் கடலாகவும் தன் அறிவைச் சிறுபடகாகவும் உவமித்துக் கூறுவது எவ்வளவு ரசமாக இருக்கிறது! இக்கருத்தையே கம்பர் எப்படிச் சொல்லுகிறார் பார்ப்போம்: "பாற்கடலைக் கண்டு அதை முழுவதும் நக்கியே குடித்துவிடவேண்டும் என்று ஒரு சிறு பூனை பேராவல் கொண்டால் எப்படி இருக்கும்? அதைப்போல் இருக்கிறது நான் ராம கதையைச் சொல்ல வேண்டும் என்று ஆவல் கொள்ளுவது" என்று இவர் கூறுகிறார். உபமானம் மிகவும் ரசமாக இருந்த

போதிலும் பாற்கடலை நக்கிக் குடிக்க ஆவல் கொள்ளும் ஒரு சிறு பூனையெனத் தம்மைக் குறைத்துச் சொல்லுவது கொஞ்சம் மிகைதான் அல்லவா?

பழங்காலத்தில் சீன தேசத்து மக்கள் பிறரை உபசரிப்பதில் விசேஷ கவனம் செலுத்துவார்களாம். எவ்வளவு சாதாரண மனிதராக இருந்தாலும் வந்தவர்களை ஏற்றியும், தம்மைத் தாழ்த்தியும் பேசவேண்டும் என்பது சம்பிரதாயம். அதன்படி பெரிய மாளிகையாயினும் வேண்டும் என்றே, "இந்தக் குடிசை தங்கள் வரவால் புனிதமாயிற்று" என்றும், "என்ன பாக்கியம் செய்ததோ!" என்றும் உபசாரமாகப் பேசுவார்களாம். மிகைபடக் கூறுவதை எடுத்துக் காட்ட இதைவிடச் சிறந்த உதாரணம் வேண்டுமா?

ஆகவே மிகைபடப் பேசுவதிலும் ஆராய்ந்து பார்த்தால் எவ்வளவு சாதுரியம், கற்பனை, இலக்கியச் சுவை இவைகள் வெளியாகின்றன, பாருங்கள்!

# 15

# கட்டுரை எழுதுவது

"'கலைமகள் ஆசிரியரிடமிருந்து பொங்கல் மலருக்கு ஒரு கட்டுரை அல்லது கதை எழுதி அனுப்பும்படி கடிதம் வந்து நாளாகிவிட்டதே; ஏதாவது எழுத வேண்டுமே" என்று பேப்பர், பென்ஸில் சகிதம் உட்கார்ந்தேன். பேப்பரும் பென்ஸிலும் மட்டும் இருந்தால் கட்டுரையோ கதையோ ஆகிவிடுமா? பென்ஸிலைக் கையில் எடுத்துக்கொண்ட பிறகுதான் என்ன எழுதுவது என்று யோசனை உண்டாயிற்று. என்ன எழுதுவது? கட்டுரையா? எதைப்பற்றிக் கட்டுரை?

'நன்ருக இருக்கிறது! எழுதுவதற்கு விஷயத்துக்கா பஞ்சம்? எதைப்பற்றித்தான் எழுதக்கூடாது?' என்று கேட்கிறீர்களா? உண்மையே; எழுதுகிறவர்கள் எழுதிஞல் எதுவும் விஷயமாகிவிடும் என்பதில் சந்தேகம் இல்லை. ஆனல் அந்த, 'எழுதுகிறவர்கள்' இருக்கிருர்களே, அவர்கள் கையில் அல்லவா எல்லா விசேஷமும் இருக்கிறது? அதை நாம் மறந்துவிட முடியுமா?

எவ்வளவு அற்ப விஷயமாக இருந்தாலும் சரி, அதையே வைத்துச் சிறந்த கட்டுரையாக்கிவிடுவார் ஒரு நல்ல எழுத்தாளர்; கதையும் அப்படித்தான். நல்ல கற்பஞ சக்தி மட்டும் இருந்தால் சாதாரணச் சிறு சம்பவங்கூட அருமையான கதைக்கேற்ற முதல்தர விஷயமாகிவிடும். எல்லாம் நாம் கையாளும் சாமர்த்தியத்தில் இருக்கிறது.

ஏ. ஜி. கார்டினர் என்ற ஆங்கில ஆசிரியர் ஒரு நாள் கட்டுரை எழுத உட்கார்ந்தாராம். வழக்கம்போல் யோசனை ஓடவில்லையாம். வெகுநேரம் சிரமப்பட்டும்

கட்டுரை எழுதினபாடில்லை. இதற்கு என்ன காரண மென்று ஆராய்ந்தபோது விஷயம் விளங்கிற்று. அவர் எப்போதும் பென்ஸிலால்தான் எழுதுவது வழக்கம். அன்று என்னவோ மறதியாகப் பௌண்டன் பேனு விஞல் எழுதத் தொடங்கினர். அதுதான் ஒரு நாளும் இடைஞ்சலில்லாமல் சுகமாக வேலை செய்யும் யந்திரம் அன்று அவ்வளவு மக்கர் பண்ணிற்று என்று தெரிந் தது. அதிலிருந்து பழக்கம் என்பது ஒன்று மனிதனை எப்படித் தன்வசமாக்கிவிடுகிறது என்ற எண்ணம் உதிக்கவே உடனே "பழக்கம்" என்பதைப்பற்றியே ஓர் அழகான கட்டுரை எழுதிவிட்டார்.

அப்படியே நாம் இப்போது இந்தக் கட்டுரை எழுதுவது என்னும் விஷயத்தையே எடுத்துக்கொள் வோம். தாய்மொழியின்மேல் உண்டாயிருக்கும் புதிய ஆர்வம் காரணமாக நாட்டில் எங்கும் பத்திரிகைகள் தோன்றியிருக்கின்றன. உலகம் முழுதும் ஏற்பட்டிருக் கும் இவ்வளவு காகிதப் பஞ்சத்திலுங்கூடப் பத்திரிகை கள்மட்டும் மலிந்து கிடப்பது ஒரு விந்தை அல்லவா? அவை நூற்றுக்கணக்காக விதம் விதமான பெயர் களுடன் தோன்றியவண்ணம் இருக்கின்றன. பத்திரிகை என்றுல் கூடவே அதற்கு எழுதுபவர்களையும் சேர்த் துச் சொல்ல வேண்டும் அல்லவா? எழுதுபவர்கள் இல் லாவிட்டால் பத்திரிகைகள் நடப்பது எப்படி? பத்திரி கைகள் இல்லாவிட்டாலும் எழுத்தாளர்கள் தங்கள் சரக்குகளைப் பிறருக்கு எடுத்துக்காட்டிப் புகழ் பெறு வதும் துர்லபந்தான். ஆகவே பத்திரிகைகளுக்காக எழுத்தாளர், எழுத்தாளர்களுக்காகப் பத்திரிகை என்ற ரீதியில் பத்திரிகை எண்ணிக்கையும் எழுத்தாளர் எண்ணிக்கையும் பெருகிக்கொண்டே போகின்றன.

சில வருஷங்களுக்கு முன்பு சிலரே எழுதிக் கொண்டிருந்தனர். மற்றவர்கள் அவர்கள் எழுதிய வற்றைப் படித்துக்கொண்டிருந்தார்கள். பத்திரிகையில்

எழுதுவதற்கு ஏற்ற அறிவும் கல்விப் பயிற்சியும் இருந்தாலன்றி எழுதுவது சரியல்ல என்ற நம்பிக்கை இருந்த காலம் அது. அந்தக் காலம் இப்போது மலை ஏறிவிட்டது. தற்காலம் ஒவ்வொருவருக்கும், 'நாம் எழுத வேண்டும். நாம் எழுதியது பத்திரிகையில் வரவேண்டும்' என்ற அவா பெரிதாக இருக்கிறது. அவ்வாறே பெரும்பாலோர் எழுதவும் தொடங்கிவிட்டார்கள். "ராஜமா இந்தக் கட்டுரை எழுதியிருக்கிறாள்! அவளைப் பார்த்தால் எழுதுபவள்போலவே தோன்றவில்லையே!" என்று நாம் வியப்படைகிறோம்.

'ராஜம் ரொம்பப் படித்தவள் அல்ல. ஆயினும் பத்திரிகைகளுக்குக் கட்டுரை எழுதுகிறாள்' என்பது தான் நாம் இங்கே கவனிக்க வேண்டிய விஷயம். உண்மையில் ராஜம் நல்ல புத்திசாலி; நன்றாகப் பேசுவாள். தனக்குத் தோன்றியதைச் சாதாரணமாகப் பேசும் முறையிலேயே எழுதிவிடுகிறாள். அது சுவாரஸ்யமான கட்டுரையாக அமைந்துவிடுகிறது. "கட்டுரைக்கு என்ன பிரமாத விஷயங்களா வேண்டும்? இரண்டொரு கருத்துக்கள் இருந்தாலும் போதும். தெளிவாக, அழகாகச் சொல்ல வேண்டும்; அவ்வளவுதான்" என்கிறீர்களா? வாஸ்தவம்; அதைத்தான் நானும் சொல்லுகிறேன்.

எனக்குத் தெரிந்தவர் ஒருவர் நன்றாகப் படித்தவர்; பளிச்சென்று பேசுவார். அவர் சாதாரணமாகப் பேசும்போது விஷயத்துடன் நல்ல கிண்டல், ஹாஸ்யம் எல்லாம் பேச்சில் கலந்து வரும். அவர் பேசுகிறபடியே எழுதினால் எவ்வளவோ ரசமாக இருக்கும்! ஆனால் அவர் யோசித்து எழுதும் கட்டுரையோ அவர் பேச்சுக்கும் எழுத்துக்கும் சிறிதேனும் சம்பந்தம் இல்லாமல் முற்றும் ஏமாற்றத்தை அளிப்பதாக இருக்கும். சிறிய கருத்தையும் பெரிதாகத் தோன்றும்படி செய்யும் முயற்சியில் விஷயத்தைக் கொஞ்சமும் சாரமில்லாமலும் தெளிவில்லாமலும் அடித்துவிடுவார். ஆழ்ந்த கடின

மான பாவங்களையும் எளிய சொற்களில் லகுவாகச் சொல்லுவதல்லவா பெருமை?

வேறொரு நண்பர். அவருக்கும் எழுதுவதற்கும் வெகுதூரம். 'வேலை இல்லாதவர்கள்தாம் கட்டுரை எழுதுவார்கள்' என்று ஒரே இகழ்ச்சியாகப் பேசிவிடுவார். அது ஒரு வீண் பொழுதுபோக்கு என்பதே அவர் கொள்கை. வேலை இல்லாவிட்டால் கட்டுரை எழுத வந்துவிடுமா என்றுதான் கேட்கிறேன். அப்படி இருந்தால் வண்டி வண்டியாக ஒவ்வொருவரும் எழுதிப் பத்திரிகையையும் நிரப்பிவிடலாமே!

அது அவ்வளவு எளிதான காரியமல்ல. சிறந்த கட்டுரைகள் எழுத வேண்டுமென்றால் அதற்கு ஒரு தனித் திறமையும் பயிற்சியும் இருக்க வேண்டும். நூறு தரம் எழுதிக் கிழித்தாலும் நூற்று ஓராவது தடவை எழுதிப் பார்ப்பதற்கு மனம் சலிக்காமல் இருக்க வேண்டும்.

ஏ. ஜி. ஜி. போன்ற பிரபல ஆசிரியர்களின் கட்டுரைகளை நாம் எவ்வளவு அநுபவிக்கிறோம்! இவர்கள் மட்டும் எழுத உட்கார்ந்தவுடன் ஒரே மூச்சில் கட்டுரையை எழுதி முடித்த பிறகுதான் எழுந்திருப்பார்கள் என்று நாம் ஏன் நினைக்கவேண்டும்? ஒவ்வொரு கட்டுரையையும் அவர்கள் யோசித்து, பொறுமையோடும் கவலையோடும் மணிக்கணக்காக உட்கார்ந்து எழுதிய பிறகே இந்தக் குற்றமற்ற வடிவத்துக்குக் கொண்டு வந்தார்கள் என்று ஏன் இருக்கலாகாது? எழுத உட்கார்ந்த பிறகுதான், நமது மூளைக்கு உள்ள சக்தியும் சுறுசுறுப்பும் எவ்வளவு என்பது புலப்படும். முதலில், எண்ணம் ஒன்றும் தெளிவாக இல்லாமல் மனக்குகையின் இருளிலேயே புதைந்து கிடக்கும். அவைகள் விரைவில் உருப்பெற்று நமக்குக் காட்சி அளிக்கமாட்டா. அவைகள் ஒவ்வொன்றையும் இருட்டை விட்டு வெளியேற்றித் தட்டித்

துடைத்து ஒழுங்காக அவைகளின் இடத்தில் கொண்டு சேர்ப்பது சில சமயம் பிரம்மப் பிரயத்தனம் ஆகிவிடும்.

எனக்கு மிகவும் பழக்கமான பெண்மணி ஒருவர் கட்டுரை எழுதுவதில் நிரம்பத் தேர்ச்சி பெற்றவர். அவர் எழுதுபவை யாவும் சரளமான நடையில் வெகு ரசமாக அமைந்த கட்டுரைகள். படிக்கப் படிக்க எனக்கு அலுப்பதே இல்லை.

"எப்படி இவ்வளவு அநாயாசமாக எழுதுகிறீர்கள்? எனக்கு வரவில்லையே!" என்று ஒரு சமயம் கேட்டேன்.

"விடாமல் எழுதிக்கொண் டிருந்தால் ஒரு நாள் நம் இஷ்டப்படி வராமலா போய்விடும்? எழுதுவதை மட்டும் விடக்கூடாது" என்று அவர் பதில் சொன்னார்.

அதெல்லாம் சரிதான். ஆனால் சளைக்காமல் மேன் மேலும் பாடுபடுவதற்கு வேண்டிய அந்த மன உறுதி வேண்டுமே! அப்போதுதானே இலக்கியத் துறையில் வெற்றி பெறுவது சாத்தியமாகும்! யோசிப்பதற்கும் எழுதுவதற்கும் சிரமம் இல்லை என்றால் அப்புறம் ஒரு கவலையும் இல்லை. நம் பேனாவின் நுனிக்கு இலக்காகாத விஷயமே உலகில் இல்லாதபடி வேண்டுமானாலும் அடித்துவிடலாம்.

எழுதுவதையே பிழைக்கும் தொழிலாகக் கொண்டு விட்டால் ஒருவேளை அலுத்துப் போய் அதில் வெறுப் புக்கூடத் தட்டிவிடலாம். ஆனால் ஓய்வு நேரங்களில் பொழுது போக்காக வைத்துக்கொண்டிருப்பவர்களுக்கு அந்தப் பயம் இல்லை.

ஆங்கிலத்தில் ஹாபி (Hobby) என்று சொல்லு வது உண்டு. சிலருக்குச் சங்கீதம் என்றால் உயிர். வேறு சிலருக்கு டென்னிஸ் விளையாடுவதில்தான் ருசி. மற்றும் சிலருக்கு இன்னும் வேறு எதிலாவது நாட்டம் இருக்கும். ஒவ்வொருவரும் ஓழிந்த நேரங்களில் தமக்குப் பிடித் ததை அப்பியசிப்பதில் ஊக்கமுள்ளவர்களாக இருப்

பார்கள் அல்லவா? மேற் கூறியவைகளைப்போல் எழுது வதையும் நமக்குப் பிடித்த பொழுதுபோக்காக வைத் துக்கொண்டு பயிற்சி செய்தால் என்னவென்று எனக் குத் தோன்றுகிறது. உண்மையில் சரியானபடி மூளைக்கு ஓட்டம் ஏற்பட்டுவிட்டால் எழுதுவதைப்போல் உற்சாக மானது வேறு எதுவும் இல்லை என்று நிச்சயமாகச் சொல்லலாம்.

அதிருஷ்டவசமாக நம் மனத்துக்கு இசைந்த விஷயமே ஏதாவது கிடைத்துவிடுகிறது. அப்போது எவ்வளவு சௌகரியம் என்பதைச் சொல்லவும் வேண்டுமா? அதைப்பற்றி யோசிப்பதும் எழுதுவதும் நமக்கு அளவுகடந்த உற்சாகத்தையே அளிக்காதா? வாழ்க்கையிலேயே உண்மையான பிடிப்பு ஏற்பட்டது போன்ற உணர்ச்சி அப்போதுதான் உண்டாகும்.

பலரும் படித்து அநுபவிக்கும் விதம் எழுதும் திறமை எல்லோருக்கும் இருப்பது சாத்தியமல்ல. அந்த அதிருஷ்டம் வெகு சிலருக்கே வாய்க்கிறது. வாக்கியங்களைப் பிசகில்லாமல் நன்றாக எழுதினால் மட் டும் போதாது. வாசகர்களுக்குப் பிடித்த விஷயமாக ரச மாக எழுதப் பயில வேண்டும்; அதுதான் முக்கியம்.

ஆயினும் பலர் படித்து ரசிக்கும்படி எழுதும் ஆற் றல் நமக்கு இல்லாவிட்டால்தான் என்ன? அதற்காக நாம் எழுதாமல் இருப்பானேன்? நமக்கு மிகவும் வேண்டியவர்கள் இல்லையா? அவர்கள் ஒரு நாளும் நாம் எழுதியதை இகழமாட்டார்கள். கட்டுரையிலுள்ள குணத்தை அறிந்து சந்தோஷமே அடைவார்கள். அது நமக்கு ஒரு பெரிய ஆறுதல் அல்லவா?

தவிர, நமக்குத் தெரியாத அன்பர் யாராவது நம் கட்டுரையைப் பாராட்டி ஒரு வரி எழுதிவிட்டால், அது நமக்கு எத்தகைய பேரானந்தத்தை அளிப்பதாகும்! "போதும் என்ற மனமே பொன் செய்யும் மருந்து." எல்லாருமே முன்னணிக்கு வருவதென்பது சாத்தியமா?

# பண்பட்டவர் யார்?

தினம் உலகில் எவ்வளவோ பேர்களைப் பார்க்கிறோம். எவ்வளவோ பேருடன் பழகுகிறோம். அனைவரும் ஒருவரைப்போல் ஒருவர் இருப்பதில்லை. கண், மூக்கு, வாய் முதலிய அங்கங்கள் ஒன்றுபோல் இருப்பினும் தோற்றத்தில்தான் எவ்வளவு வேற்றுமை தோன்று கிறது! இது பெரிய அதிசயம் அல்லவா? ஆனால் நாம் இதை ஆச்சரியமாகவே கருதுவதில்லை. இப்படி இருப் பதுதான் உண்மையில் நமக்குச் சகஜமாகத் தோன்று கிறது. உயிர் அனைத்தும் ஒன்று; உருவம் மட்டும் வேறு. எல்லாம் வல்ல கடவுளின் சிருஷ்டி விசித்திரத்தையே இவ்விஷயம் நமக்கு நன்கு புலப்படுத்துகிறது. இந்த எண் ணிறந்த வேற்றுமையின் காரணமாகவே நமக்கு இவ் வுலகின்மீது இவ்வளவு பற்றுதலும் ஆர்வமும் ஏற்படு கின்றன என்று கூறலாம்.

ஆனால் மனிதர்களின் தோற்றத்தில் மட்டுந்தான் இந்தவேற்றுமையைக் காண்கிறோமா? இல்லை. அவர்கள் நடை, உடை, பேச்சு, சுபாவம் யாவற்றிலும் நமக்கு இந்த வித்தியாசம் தோன்றுகிறது. ஒருவரை நல்லவர் என்கிறோம். மற்றொருவரைக் கெட்டவர் என்று இகழ் கிறோம். ஒருவரைப் படித்தவர் என்றும், மகாமேதாவி என்றும் புகழ்ந்து பேசுகிறோம்; இன்னொருவரைப் படிப்பில்லாத முட்டாள் என்று அலட்சியம் செய் கிறோம். ஒருவர் ஆடை அணிகளால் நவ நாகரிகத்தின் சிகரமாகக் காட்சியளிக்கிறார். மற்றொருவர் ஆடை விஷ யத்தில் சிரத்தையே கொள்ளுவதில்லை. இப்படி ஒவ் வொருவரும் ஒவ்வொரு விதமாகத் தம்முடைய தனி இயல்பைப் புலப்படுத்துகின்றனர்.

மேற்கூறியவர்களை விட வேறுவகை மனிதர்களும் நம்மிடையே உண்டு. ஆனால் அத்தகைய மனிதர்கள் உலகில் அநேகர் இல்லை. அவர்கள் தன்மையைத் தக்க படி உணர்ந்து கொண்டாடுபவர்களும் மிகக் குறைவு தான் என்று சொல்லவேண்டும். இந்த மனிதர்கள் யார்? இவர்களை நாம் எப்பெயர் கொண்டு அழைக்கிறோம்?

ஆங்கிலத்தில் கல்ச்சர் (culture) என்ற ஓர் அரிய சொல் வழங்குவதை நாம் அறிவோம் அல்லவா? அந் தச் சொல்லுக்கு உயர்ந்த பொருளை அவர்கள் அளித் திருக்கிறார்கள். ஒருவர் பி. ஏ., எம். ஏ., பட்டம் பெற்ற வராக இருக்கலாம். திரண்ட செல்வமும் அந்தஸ்தும் உள்ளவராக இருக்கலாம். ஆயினும் அவர் கல்ச்சர் உள்ளவர் அல்ல என்று சிலரைப்பற்றிச் சொல்லு வார்கள். ஆகவே கல்ச்சர் என்பது செல்வத்தில் இல்லை; படிப்பில் இல்லை; அந்தஸ்தில் இல்லை. அது இவை ஒன்றிலுமே சேர்ந்ததில்லை என்று தெரிகிறது. நிறம், உருவம், மென்மை இவைகளை விட்டு மணம் என்று ஒன்று தனியாக மலரில் அமைந்திருப்பதுபோல் இந்த இயல்பும் மக்களிடத்தில் மற்றக் குணங்களை விட்டுத் தனியாகவே அமைந்து விளங்குகிறது. இந்தக் கல்ச்சர் என்ற சொல்லுக்குச் சரியான பிரதி மொழி தமிழில் சமீப காலம் வரையில் இல்லாமலே இருந்தது. இப் போது கொஞ்சகாலமாக ஒன்று வழங்கிவருகிறது. அது தான் நாம் இப்போது அடிக்கடி உபயோகித்துவரும் பண்பாடு என்ற சொல்.

இந்தச் சொல் எதைக் குறிக்கிறது என்று சரி யாகச் சொல்ல முடியாமல் இதைப்பற்றி ஆராய்ந்து எவ்வளவோ அறிஞர்கள் ஆங்கிலத்தில் எழுதியிருக் கிறார்கள். 'பண்பாடு என்பது உயர்தரக் கல்வியினின்றும் ஏற்படுகிறதா?' என்று ஒருவர் கேட்கிறார்.

அதை ஆராய்ந்து தீர்மானிப்பது கடினமாக அல்லவோ இருக்கிறது? ஒருவர் எவ்வளவோ கற்றிருக்

கலாம். ஆயினும் ஒன்றும் அறியாத பாமரராக இருக்கலாம். உலகிலுள்ள புத்தகங்கள் யாவற்றையும் படித்துக் குவித்திருந்தாலும், எழுத்து வாசனையே அறியாத முழு மூடனாகவும் தோன்றலாம் அல்லவா? புத்தகங்களிலேயே முழுகி இருப்பதனால் மட்டும் ஒருவன் பண்பட்ட மனிதன் ஆகிவிட மாட்டான். அவன் நடத்தும் வாழ்க்கைக்கும் அவன் கற்ற கல்விக்கும் யாதொரு சம்பந்தமும் இல்லாதிருப்பின் அப்போது அவனைப் பண்பாடு உடையவன் என்று ஒருவரும் கூற முடியாது.

ஆகவே நிரம்பப் படித்தவர்; பெரிய அறிவாளி என்று இருந்தால் மட்டும் போதாது; பண்பட்ட உள்ளத்தை நாம் அவர் நடத்தையில்தான் காண முடியும் என்று ஏற்படுகிறது. கற்ற கல்வியெல்லாம் உள்ளத்தைப் பண்படுத்தும்போதுதான் அதற்கு உண்மையான உயர்வும் பெருமையும் உண்டாகும்.

பல இடங்களையும் மனிதர்களையும் பார்த்துப் பழகியதால் உண்டான அநுபவமும் விவேகமும் அவர்களுக்கும் மற்றவர்களுக்கும் உள்ள பேதத்தை நன்கு எடுத்துக்காட்டும். ஆயினும் உலகமெல்லாம் சுற்றி அங்கங்கே உள்ள விசேஷங்களையும், மக்களைப்பற்றிய அரிய விவரங்களையும் சேகரித்துக்கொண்டு வந்தவர்கள் இருக்கிறார்களே; அவர்களை யெல்லாம் பண்பட்டவர்கள் என்று சொல்லிவிட முடியுமா? அதிகப் பிரயாணம் செய்வதிலும், உலக வர்த்தமானத்தை நன்கு அறிந்திருப்பதிலும் பெருமை உண்டுதான் என்றாலும், அதனால் அவர்களுக்குத் தனிப் பண்பு ஏற்படாமலும் இருக்கலாம். இனி வேறு எவ்விதமாகத்தான் நாம் பண்பட்ட மனிதர்களைத் தேர்ந்தெடுப்பது? 'அடுத்தது காட்டும் முகம்' என்பார்கள். அவ்வாறு இல்லாமல் தங்கள் விருப்பு வெறுப்புகளைப் பிறர் அறியாமல் மறைத்து எப்போதும் அழகாகவும் மரியாதையாகவும் பேசு

வதையே அருங்கலையாகப் பயின்றவர்கள் இருக்கிறார்களே; அவர்களை என்னவென்று சொல்லுவது?

இத்தன்மையோரிடம் ஒருவரும் அன்புகொள்ளாமல் இருக்க முடியாது. அவர்களைக் கண்டு சந்தோஷமாகவும் பிரியமாகவுமே அனைவரும் பேச முன்வருவார்கள். ஆனால் அவர்கள் வசீகரமான பேச்சையும் தோற்றத்தையும்போல் அவர்கள் உள்ளமும் அன்பும் ஆதரவும் நிரம்பியிருந்தால் அன்றி அவர்களைப் பண்பட்ட மனமுள்ளவர்கள் என்று கூறுவது சரியல்ல.

ஜான் கௌபர் போயிஸ் (John Cowper Powyes) என்ற அமெரிக்கப் பேரறிஞர் இதைப்பற்றி என்ன சொல்லுகிறார் என்று பார்ப்போம்.

"பண்பாடு என்பது கோபத்தை அடக்கி ஆளுவதே ஒழிய வேறல்ல. எவ்வளவுதான் கற்று இலக்கியப் பற்றும் பயிற்சியும் உள்ளவர்களாயினும், தம்மை மீறி வெளித் தோன்றும் வெஞ்சினத்தை அடக்கச் சக்தியற்றவர் என்றால் என்ன பிரயோஜனம்? கோபம் கொடிது அல்லவா?" என்கிறார்.

"ஏதோ துர்ப்பாக்கியத்தினால் சிலர் நம்மைக்காட்டிலும் தாழ்ந்தவர்களாகப் பிறந்துவிடுகிறார்கள். அவர்களிடம் நாம் நடந்துகொள்ளும் விதத்தில்தான் உண்மையில் நாம் பண்பட்டவர்களா அல்லவா என்பது தெரியவரும்" என்று அவர் எடுத்துக்காட்டுகிறார்.

"பணமும் பதவியும் புகழும் பெற்றவர்களிடம் இங்கிதமாகவும் மரியாதையாகவும் நடந்துகொள்வதற்குத் தனிப்பண்பு எதற்கு வேண்டும்? எளியவர்கள், பயந்தவர்கள், மனோதைரியம் அற்றவர்கள், மூளை இல்லாதவர்கள் போன்றவர்களிடம் அல்லவா சரியானபடி நடந்துகொள்ள நாம் பயின்றிருக்க வேண்டும்? பண்பட்ட மனமுடையவர், தாம் மதித்துப் பேசுவதற்கு அருகரல்லர் என்று உலகில் யாரையும் இகழ்ந்து தள்ள

மாட்டார்" என்று அவர் மேலும் விவரித்துக் கூறுகிறார்.

உண்மையில் பண்பட்ட மனமுடையவர்கள் என்றால் அவர்கள் சிறிதும் அகம்பாவம் இல்லாத எளிய இயல்புள்ளவர்களாகத்தான் இருப்பார்கள் என்பது நிச்சயம். அவர்களுக்குத் தாம் நினைப்பதும் பேசுவதுந் தான் சரி என்பதில்லை. தம்முடைய கொள்கைகள் தாம் உயர்வு என்றும் அவற்றையே பிறரும் பின்பற்ற வேண்டும் என்றும் கட்டாயம் இல்லை. ஒருவருடைய கொள்கைகளோ வழக்கங்களோ எவ்வளவுதான் தவறாகத் தோன்றினாலும், அவற்றை ஆட்சேபித்துப் பேசி அவர் மனத்தைப் புண்படுத்துவது என்பது பண்பட்டவர் செய்கையல்ல. பிறர் மனம் நோகும்படி நடக்கக் கூடாது என்பதுதான் அவர்கள் வாழ்க்கையில் போற்றி வரும் முக்கிய லட்சியமாகும்.

"சம்பாஷணையின் சுவையை அடியோடு கெடுப்பது கட்சியாடுவது. கட்சி பேசிப் பொழுதை வீணாக்குவதைப்போல் மடத்தனம் உலகில் வேறொன்றும் இல்லை. ஒருவன் எதற்காக விடாமல் மேலும் மேலும் வாதம் புரிகிறான்? நான்குபேர் மத்தியில் தன் சாமர்த்தியத்தையும் படிப்பையும் காட்டிப் பெருமைகொள்வதற்கும், மற்றவர்கள் வெறும் முட்டாள்கள் என்று தோன்றும்படி செய்வதற்குமே அல்லவா? ஆனால் பண்பட்ட உள்ளம் உடையவர்கள் என்ன செய்வார்கள்? சம்பாஷணை, வாதம் புரிவதில் இறங்கிவிடும் என்று தெரிந்ததும், சாமர்த்தியமாக வாதாடித் தம் கொள்கையை ஸ்தாபிப்பதைக் காட்டிலும், ஒருவரும் அறியாமல் அவ்விடம் விட்டுச் சென்றுவிடுவதே மேல் என்று எண்ணி மெதுவாக அங்கிருந்து நழுவிவிடுவார்கள்" என்று போயிஸ் (Powyes) கூறுகிறார்.

பிறருடைய தேவைகளைக் கவனித்து வேண்டும் போது அவர்களுக்குச் சிறு உபகாரங்கள் செய்யும்

இயல்புடையவர்கள் உலகில் அநேகர் இருக்கமாட்டார்கள். பெரும்பான்மையோர் தம் சொந்தக் காரியங்களில் ஈடுபட்டவர்களாகவே இருப்பார்கள். ஆயினும் அவ்வாறு பிறருக்கு உதவி புரிவதிலும் இரண்டு விதம் உண்டு. சிலர், "நான் உனக்கு இந்த உபகாரம் செய்கிறேன். வேறு யாரும் இப்படி என்னைப்போல் தன்னலம் கருதாது இருக்கமாட்டார்கள். என் நல்ல மனத்தைப் பார்" என்றெல்லாம் சொல்லாதவண்ணம் சொல்லித் தம் செயலை விளம்பரப்படுத்திக் கொள்வார்கள். அத்துடன் தம்மிடமிருந்து உபகாரத்தைப் பெற்றுக்கொண்டவர்கள் பிறகு தமக்குப் பதில் செய்யக் கடமைப்பட்டவர்கள் என்று நினைத்துக்கொள்ளும்படியும் செய்துவிடுவார்கள். ஆனால் பண்பட்ட உள்ளத்தினரோ அப்படி அல்ல, தாம் செய்வது என்ன பிரமாதம் என்று தோன்றும்படி வெகு சாதாரணமாக எந்த ஆடம்பரமும் இன்றிச் செய்வார்கள். பிறரும் ஒரு சங்கோசமும் இல்லாமல் வெகு தாராளமாக அந்த உபகாரத்தை ஏற்றுக்கொள்வார்கள். இம்மாதிரியான நிகழ்ச்சிகளை நாம் தினமும் உலகில் காண்கிறோம்.

ஆலிவர் கோல்ட்ஸ்மித் (Oliver Goldsmith) என்ற சிறந்த ஆங்கில நூலாசிரியர் இது சம்பந்தமாக எழுதியிருப்பது எனக்கு இச்சமயம் ஞாபகத்துக்கு வருகிறது. பிரெஞ்சுக்காரர், இங்கிலீஷ்காரர் இவ்விருவருடைய குணங்களின் தாரதம்மியம் ஒரு சீனருக்குத் தோன்றும் விதத்தில் கற்பனை செய்து அவர் விளக்குகிறார். சீனக்காரர் மேற்கூறிய தம் இரு நண்பர்களுடன் பேசிக்கொண்டு செல்லும்போது வழியில் மழை பிடித்துக்கொண்டதாம். அப்போது நண்பர்கள் இருவரும் தம்மிடம் இருந்த மழைக்காக அணியும் 'கோட்'டை அவரிடம் அளித்து அதைப் போட்டுக்கொள்ளும்படி கேட்டுக்கொண்டனராம். அவர் எடுத்துக்கொள்ளத் தயங்கியபோது பிரெஞ்சு நண்பர், "இல்லை; அவசியம் பெற்றுக்கொள்ள வேண்டும். நீங்கள் யோசிப்

பது நியாயந்தான். வேறு யாரையும் நான் இவ்வளவு வற்புறுத்த மாட்டேன். ஆனால் உங்களைப்போன்ற நண்பர்கள் விஷயத்தில் அப்படி அல்ல'' என்று மேலும் பலவிதமாகச் சொல்லி வேண்டிக்கொண்டார். ஆங்கில நண்பரோ, "நான் எனக்காகத்தான் சொல்லுகிறேன். இதைத் தூக்கிச் செல்வது உண்மையில் எனக்குச் சிரமமாகவே இருக்கிறது; இதை நீங்கள் பெற்றுக் கொண்டால் எனக்குத்தான் சௌகரியமாக இருக்கும்'' என்ற விதமாகக் கேட்டுக்கொண்டாராம்.

இவ்வளவு மட்டும் கூறி ஆசிரியர் மேலே ஒன்றும் விவரிக்காமல் விட்டுவிட்டார். இவ்விருவரில் ஆசிரியர் யாரை உயர்வாகக் கருதுகிறார்? உண்மையில் யாருடைய இயல்பு உயர்ந்தது? இவ்விஷயத்தைப்பற்றிச் சரியாகத் தீர்மானிக்க முடியாமல் ஒவ்வொருவர் ஒவ்வொரு விதமாகக் கூறுவது உண்டு. பிரெஞ்சு நண்பர் பேசக் கற்றவர்; ஆங்கில நண்பருக்கு நாஸூக்காகப் பேசத் தெரியவில்லை என்றுதான் முடிவு கட்டலாம். ஒன்று நிச்சயம். சீனக்காரர் ஆங்கில நண்பரின் உதவியைத் தான் சங்கோசம் எதுவுமின்றி ஏற்றுக்கொண் டிருப்பார் என்றுமட்டும் உறுதியாகச் சொல்லலாம்.

பண்பட்ட மனிதர்கள் அழகாகப் பேசத் தெரிந்தவர்களாக இருப்பினும் மேற்கூறிய ஆங்கிலேயரைப் போலவே பிறரிடம் நடந்துகொள்வார்கள். அற்ப உபகாரங்களெல்லாம் மிகப் பெரியனவாகத் தோன்றும்படி செய்யமாட்டார்கள்.

போயிஸ் (Powyes) என்ற அறிஞர் பண்பட்டவர்களின் குணாதிசயங்களை மேன்மேலும் சிறப்பித்துக் கூறுகிறார். அவர்கள் தனிமையைத்தான் விரும்புவார்களாம். கூட்டமும் நாட்டமும் அவர்களுக்கு அருவருப்பையே உண்டாக்குமாம். 'இனிது இனிது ஏகாந்தம் இனிது' என்று அவர்கள் தனிமையில் தம் சிந்தனைகளிலேயே ரசித்துக்கொண் டிருப்பார்களாம். விஞ்ஞானத்தின்

மூலம் கண்டுபிடித்திருக்கும் அற்புதங்களைக் காட்டிலும் காடு, மலை, கடல் போன்ற இயற்கைத் தேவியின் அற்புதங்களையே கண்டு பெரிதும் வியந்து அநுபவிக்கும் தன்மை வாய்ந்தவர்களாக இவர்கள் இருப்பார்கள் என்பது அவருடைய கருத்து.

இதனால் எல்லாம் என்ன ஏற்படுகிறது? பண்பட்டவர் கேவலம் நாகரிக மனிதரோ, சிறந்த படிப்பாளியோ, புத்திமானோ மட்டும் அல்ல. இவை எல்லாவற்றுடனும் அவர் உணர்ச்சிகளும் அறிவுங்கூடத் தெளிந்து நன்கு பண்பட்டிருக்கவேண்டும். அப்போதுதான் அவர் பண்பட்டவர் என்பது தெளிவாகிறது.

முற்றும்



# நவக்கிரகம்

## வாழ்வில் வானநூல்

பழமையான சோதிட நூல்களும் வானநூல் களும் கிரகங்களின் வெவ்வேறு இயல்புகளை ஆராய்ந்து கூறுகின்றன. வேதம், சாஸ்திரம், மந்திரம், புராணம், தமிழ் இலக்கியங்கள் முதலியவற்றில் நவக்கிரகங்களைப்பற்றிப் பல இடங்களில் சுவையான வரலாறுகள் நிறைந்து கிடக்கின்றன. இவற்றை எல்லாம் தொகுத்து, '**கலைமகளி**'ல் கி. வா. ஜகந்நாதன் தொடர்ந்து கட்டுரைகளாக எழுதி வந்தார். இந்திய ஓவியக் கலையில் துறைபோன ஸ்ரீ ராஜம் தக்க ரேகைச் சித்திரங்களையும் மூவண்ணப் படங் களையும் வரைந்து கட்டுரைகளை அலங்கரித் தார். இப்போது 'நவக்கிரகம்' சிறந்த முறை யில் புத்தகமாக வெளிவந்துள்ளது.

★ **வழிபாட்டுக்கு ஏற்ற 9 மூவண்ணப் படங்கள். சுமார் 40 ரேகைச் சித்திரங்கள்.**

★ **ஸ்ரீ முத்துசாமி தீட்சிதர் பாடிய நவக்கிரக கீர்த்தனைகள்.**

★ **நவக்கிரகத் தியான சுலோகங்கள், நவக்கிரக மங்களாஷ்டகம்.**

**இன்னும் பல அம்சங்களுடன் விற்பனைக்குத் தயார்**

## விலை ரூ. 3/8

**கலைமகள் காரியாலயம், மயிலாப்பூர், சென்னை-4.**